மலர் - 2 இதழ் - 2



# தமிழணங்கு

(தமிழராய் இணைவோம்)

இலக்கியம், சமயம், பண்பாட்டு ஆய்விதழ்
ஆகஸ்ட், 2023
தனிச்சுற்றுக்கு மட்டும்
ஆசிரியர்: முனைவர் திருமதி செ. இராஜேஸ்வரி





மாயூரம் வேதநாயகம் பிள்ளை
(1826 - 1889)



தமிழர் இலக்கிய சமய பண்பாட்டு ஆய்விதழ்

# தமிழணங்கு

(தமிழராய் இணைவோம்)

*மலர்-2* *ஆகஸ்ட் – 2023* *இதழ்-02*


**சிறப்பாசிரியர்**
*பொறிஞர் கவிஞர் முத்தமிழ் விரும்பி*

**நிறுவனர் & தலைமைப் பதிப்பாசிரியர்**
*முனைவர். திருமதி செ. இராஜேஸ்வரி*

**பொறுப்பாசிரியர்**
*முனைவர். சந்திரிகா சுப்பிரமணியன்*

**ஆசிரியர் குழு**
*கிங்ஸ்டன் ஜெகநாதன் (இந்தியா)*
*தேமொழி (அமெரிக்கா)*
*அன்பு ஜெயா (ஆஸ்திரேலியா)*
*மின்னச்சன் இங்கர்சால் (நோர்வே)*
*Dr. புதேரி தானப்பன் (டில்லி)*

**வடிவமைப்பு**
*C. சந்திர விமல் M.A., B.Ed*

*தனி இதழ் .............................................. ரூ 120*
*அரையாண்டு சந்தா ............................. ரூ 600*
*ஆண்டு சந்தா......................................... ரூ 1200*

Google Pay / Phone Pay *மூலம் செலுத்த*
*+91 7010997639*


**Thamizhanangu**

Printed & Published by
E. Satish Rajkumar (Advocate)
3/422, Thiruvalluvar Street,
Dinamani Nagar, Madurai,
Tamil Nadu 625 018.
Ph: +91 7871123226, +91 7010997639


*கட்டுரைகள் அனுப்புவோர்*
rajetamiljuly1@gmail.com
thamizhanangu1@gmail.com *க்கு அனுப்பவும்*

*இவ்விதழில் இடம்பெற்றுள்ள கருத்துக்கள் அனைத்தும் கட்டுரையாளர்களின் கருத்துகளே ஆகும். அந்த கருத்துக்களுக்கும் இதழாசிரியருக்கும் எந்தத் தொடர்பும் இல்லை.*

*- இதழ் ஆசிரியர்*

**உள்ளடக்கம்**

# தமிழ் மொழிக் குடும்பம் என்று கால்டுவெல் ஏன் சொல்லவில்லை?

***முனைவர் ஜி. ஜான் சாமுவேல்***
*இயக்குநர், ஆசியவியல் ஆய்வியல் நிறுவனம், சென்னை.*




*சென்னை மாகாணத்தின் ஆட்சியாளராகப் பணியாற்றிய எஃப். டபிள்யூ. எல்லிஸ் அவர்கள் கேம்பல் எழுதிய தெலுங்கு மொழி இலக்கணம் என்ற நூலுக்கு எழுதிய அணிந்துரையில் தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம் ஆகிய நான்கு மொழிகளும் சமஸ்கிருதத்தை உள்ளடக்கிய இந்தோ-ஆரிய மொழிகளுக்கு மாறுபட்டவை என்று பறை சாற்றினார்.*

*இதற்குப் பிறகு, கால்டுவெல் என்கின்ற அயர்லாந்து நாட்டு இறைத் தொண்டர் தமிழகம் வந்தார். அவர் ஏற்கனவே இங்கிலாந்தில் மொழியியல் பயின்றவர். மொழிகளைப் பற்றிச் சிறப்பாக அறிந்தவர். இந்திய மொழிகளின் நிலையை அவர் வியப்போடு பார்க்கின்றார். இங்கு பல நல்ல மொழிகள் இருக்கின்றன. ஆனால் இந்த மொழிகளை மக்கள் அதிகமாக மதிக்க மறுக்கின்றனர். சமஸ்கிருதத்திற்கு முக்கியத்துவம் கொடுத்து, மற்ற மொழிகளெல்லாம் சிறந்த மொழிகளல்ல என்றும்; அவை பிரதேச மொழிகள் என்றும்; சமஸ்கிருதத்திலிருந்து வந்தவை என்றும் தவறாக கருதிக்கொண்டிருக்கிறார்கள். மக்களின் இந்த எண்ணத்தை கால்டுவெல் தெளிவாக அறிந்துகொண்டார். மொழி ஆராய்ச்சியில் திட்டமிட்டு உழைக்க ஆரம்பித்தார். 1856 ல் A Comparative Grammar of Dravidian or South Indian languages என்ற நூலைப் படைத்தார். இந்த நூலினுடைய சிறப்பு என்னவென்றால் இதில் தமிழ் உள்ளிட்ட 9 மொழிகளை அவர் குறிப்பிடுகிறார். தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம், தோடா, கோடா போன்ற சில மொழிகளைக் குறிப்பிட்டு . இவை எல்லாம் திராவிட மொழிகள் என்று அழைத்தார். இந்தத் திராவிட மொழிகள் தென்னாட்டில் மட்டும் பேசப்படுகின்ற மொழிகள் என்ற எண்ணம் அவருக்கு முதலில் இருந்தது. அந்த எண்ணம் தவறானது என்று பின்னர் அவர் திருத்திக்கொகொண்டார்.*

*ஆக, முதன் முதலாகத் தென்னிந்தியப் பகுதியில் பேசப்படுகின்ற தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம் ஆகிய நான்கு மொழிகளை உள்ளடக்கிய*

ஒன்பது மொழிகள் கொண்ட ஒரு குடும்பத்தைத் திராவிட மொழிக்குடும்பம் என்று அழைத்து அதை உலகத்திற்கு அவர் பறை சாற்றினார்.



இதற்கு ஏன் திராவிட மொழிக்குடும்பம் எனப் பெயர் கொடுக்க வேண்டும் என்பது அடுத்த கேள்வி. ஆரியன் என்ற சொல்லுக்கு நிகராக இவர் இந்த திராவிடத்தை வைக்கின்றார். இதைத் தமிழ்க் குடும்பம் என்று சொல்லியிருக்கலாமே. தமிழ் தானே இதனுடைய தலைமையான மொழி, மூத்த மொழி, பண்பட்ட மொழி, அந்த மொழியினுடைய பெயராலே இந்தக் குடும்பத்தை அழைத்திருக்கலாமே, ஏன் இன்னொரு சொல்லைத் தேட வேண்டும் என்கின்ற கேள்வியெல்லாம் அவருடைய மனதிலே வந்தது. திராவிடம் என்கின்ற இச்சொல்லை பற்றிக் கூறவேண்டுமென்றால் இது தமிழ் என்ற சொல்லின் ஒரு சிதைந்த வடிவம். தமிழைக் குறிப்பதற்கு வடவர்கள் பயன்படுத்திய மூன்று வடிவங்கள் உண்டு. ஒன்று 'திராவிட' என்பது, மற்றொன்று 'திரமிட' என்பது, இன்னொன்று, 'திராவிடா' என்பது மற்றொன்று. இந்த மூன்று வடிவங்களில் திரமிட என்பது மிகவும் பழையது. அந்த திரமிட என்பது தான் சமணர்களால் திரமிளா என்று அழைக்கப்பட்டது. தமிழர்களைத் திரமிளா என்று குறிப்பிடுவது வழக்கம். வச்சிர நந்தி என்று பெயரில் ஒரு சமணர் இருந்தார். அவர் திரமிளா சங்கம் என்கின்ற ஒரு சங்கத்தை ஏற்படுத்தினார். திரமிளா சங்கம் என்றால் தமிழ்ச் சங்கம் என்று பொருள். அவர் தென்னாட்டிலே திரமிளா சங்கம் என்கின்ற ஒரு சங்கத்தை ஏற்படுத்தியதை நாம் பார்க்கின்றோம். இச்சங்கத்தைத்தான் மணிமேகலைக் காப்பியம் "புலம் புரி சங்கம் பொருளொடு முழங்க (மணி:7/114)" என்று குறிப்பிடுகிறது.

குமரிலபட்டரின் 'தந்திரவர்த்திகா' என்ற ஒரு நூலிலே தமிழைப் பற்றி கூறும் போது அவர் ஆந்திர திராவிட பாஷா என்று எழுதுகின்றார். ஆந்திர பாஷா என்பது தெலுங்கு மொழியைக் குறித்தது, திராவிட பாஷா என்பது தமிழ் மொழியைக் குறித்தது. இதனால் வடவர்கள் தமிழர்களைத் திராவிடர் என்ற சொல்லால் சுட்டினர் என்பது நமக்கு தெளிவாகக் கிடைக்கிறது. திருஞானசம்பந்தரை திராவிட சிசு என்று அழைக்கும் மரபும் உள்ளது. அந்தச்

சொல்லை ஒரு பரந்த நோக்கில் கால்டுவெல் மாற்றுகிறார். அந்தச் சொல்லை அப்படியே அவர் கையாளவில்லை. திராவிட என்ற சொல்லை எடுத்துக்கொள்கிறார். இது ஒரு இந்தியச் சொல். இந்த இந்தியச் சொல்லோடு 'ian' என்கின்ற விகுதியை அவர் இணைக்கிறார். இணைத்து Dravidian என்ற ஒரு இணைப்புச் சொல்லை உருவாக்குகிறார். திராவிடன் என்கின்ற பெயரில், திராவிடன் என்பது Anglo Indian என்ற சொல்லைப் போல, ஒரு பகுதி இந்தியாவினுடைய பகுதி; இன்னொரு பகுதி ஆங்கில மொழியினுடைய பகுதி. அது போல திராவிடன் என்ற சொல்லை ஒரு கலவை வடிவாக (Hybrid Form ) உருவாக்குகிறார்.

இந்தப் பின்னணியில் கமில் சுவலபில் என்பவர் ‘திராவிடாலஜி’ என்ற சொல்லை உருவாக்குகிறார். தமிழை அடிப்படையாகக் கொண்டது ‘தமிழாலஜி’. அது போல திராவிடத்தை அடிப்படையாகக் கொண்டது திராவிடாலஜி. இச் சொல்லை கமில் சுவலபில் உருவாக்குகிறார். இந்தச் சொற்கள் எல்லாம் நமக்கு மிகவும் தேவை. ஏனென்றால் உலக அளவில் சமஸ்கிருதத்தின் ஆதிக்கத்தைத் தலைகீழாக நிறுத்துவதற்கு இந்தச் சொற்கள் மிகவும் தேவைப்பட்டன. Dravidian studies என்ற பரந்துபட்ட ஒரு மொழிக் குடும்பத்தைத் தமிழ் என்ற ஒரு தனித்த மொழியின் பெயரால் அழைப்பதை விட இன்னொரு சொல்லால் அழைக்கலாம் என்ற எண்ணம் கால்டுவெல்லுக்கு இருந்ததினால் அவர் திராவிடம் என்ற சொல்லை உருவாக்குகின்றார். திராவிடம் என்ற சொல் ஏற்கனவே இருந்திருக்கலாம். ஆனால் கால்டுவெல் பயன்படுத்துகின்ற பாராது விரிந்த பொருளில் உருவானது பிற்காலத்தில்தான்.

இப்பொழுது திராவிடம் என்பது மொழியை மட்டும் குறிக்கவில்லை. திராவிட இனத்தினுடைய மொழியைக் குறித்தது. திராவிட இனத்தினுடைய பண்பாட்டைக் குறித்தது. திராவிட இனத்தினுடைய வாழ்வியலைக் குறித்தது. ஆக திராவிடியன் என்ற ஆங்கிலச் சொல்லுக்கு நிகராகவும் மிகப் பரந்த நோக்கில் கால்டுவெல் அவர்களால் திராவிடம் ஒரு கலைச் சொல்லாக உருவாக்கப்பட்டு, பலராலும் தொடர்ந்து கையாளப்பட்டு, இப்பொழுது அது நிலைபெற்று விட்டது. இந்தச் சொல்லை மாற்ற வேண்டும் என்று விரும்புவதைப் போன்ற ஒரு அறிவின்மை ஏதும் இருக்க முடியாது. ஆக இது ஒரு வசதியான சொல். ஏன் வசதியான சொல் என்றால் திராவிடம் ஒரு பெரிய மொழிக் கூட்டம். சமஸ்கிருத மொழிக் குடும்பத்தை எதிர்ப்பதற்கு தமிழ் மட்டுமே போதாது என்பதை அவர் உணர்ந்தார். தென்னிந்திய மொழிகளை இணைத்தார். ஒன்பது மொழிகளை வைத்துக் கொண்டு சமஸ்கிருதக் கூட்டத்தை கால்டுவெல் முதன் முதலாக எதிர்த்தார். அந்த எதிர்ப்பு வெற்றியும் பெற்றது.

# கவிஞர் முத்தமிழ்விரும்பியின் கவிதைகளில் நவீனக் கூறுகள்

**பாரதிசந்திரன்**
*(முனைவர் செ சு நா சந்திரசேகரன்)*
*வேல்டெக் ரங்கா சங்கு கலைக் கல்லூரி, ஆவடி*
*9283275782*
*chandrakavin@gmail.com*



*இலக்கியம் காலத்தால் ஒன்றை உள்வாங்கிக் கொள்கிறது. அதன் நீள அகலங்களில் விரிந்த எண்ணத் தெளிவுகள் தனது வெளிப்பாடுகளை அவ்வப்பொழுதுகளில் வெளிப்படுத்திக் கொண்டே இருக்கின்றன. தீவிரமான வாசகன் வாசிப்பின் வேகத்தில் இலக்கியக் கூறுகளின் மேம்படுத்தப்பட்ட இலயத்தை உணருகிறான். அதன் படிக்கட்டுகளில் மிக இலாகவமாய் தன் பயணத்தைத் தொடர்கிறான்.*

*அவ்வாறான லயத்தை தம் கவிதைகளில் சாகசமாய் படைப்பவர் தான் கவிஞர் முத்தமிழ்விரும்பி என்னும் அற்புதக் கவிஞர். உணர்வின் அடி ஆழத்திலிருந்து கிளை விட்டுப் பரவும் தீப்பிழம்புகள் போல் சுடர் விட்டுப் பிரகாசிக்கின்றன அவரது கவிதைகள்.*

*”உளப்பகுப்பாய்வு, மொழியியல், மானிடவியல், ஆகிய துறைகளின் ஆய்வுகள் அகமியை அதனுடைய விளைவின் விதிகள் அதன் மொழியின் வடிவங்கள் அதன் செயலின் விதிமுறைகள் ஆகியவற்றோடு அல்லது அதன் தொன்மையான மற்றும் கற்பனையான சொல்லாடலின் போக்கோடு அதற்குள்ள தொடர்பை வைத்து மையம் இழக்க வைத்திருக்கின்றன “ என்று மிஷல் பூக்கோ (Michel Bucco) கூறுவதைப் போல் சொல்லாடல்கள் கட்டுப்பாடுகளை உடைத்தெறிந்த நவீன வடிவங்களைத் தாங்கி நிற்கின்றன கவிஞர் முத்தமிழ்விரும்பியின் கவிதைகள் என்பதை அறிய முடிகிறது.*

*அகமி அல்லது சுயம் (SUBJECT OR SELF) நவீனக் கோட்பாட்டு விவாதங்களை உண்டாக்குகின்றன. அதனைச் சார்ந்த வெளிப்பாடுகளும், விமர்சனங்களும் தொடர்ந்து முன் வைக்கப்படும் சூழ்நிலையில் தமிழ் எழுத்தாளர்களில் சொல்லாடல் திறனில் பேசப்படும் முன்னவராக முத்தமிழ்விரும்பி அவர்கள் திகழ்கின்றார். இவரின் தமிழ்ச் சித்தன் என்னும் கவிதை ஒன்றில்,*

*"காயம் பொய்யென்றான்
தமிழ் சித்தன்
காயமாற்றி
காயம் படுவதன்றி
காயம் வேறில்லை.
தாயம்
சாதகமாய் விழுந்தாலும்
சத்தியமாய்
இலைநீர் தாமரை
இக்கணத்தின்
திரைய விழும்
வலி மிகும்.
மாயம் வேறென்று."*



**கவிஞர் முத்தமிழ்விரும்பி**

*தத்துவார்த்தமான சொல்லாடல்கள் வெளிப்பாடும் மறைமுகமாகப் பொருள் பொதிந்து நின்று வாசகனின் எண்ணப் போக்கிலேயே அலையவிட்டு நிதர்சனத்தைக் காணவைக்கும் திறனும், இக்கவிதையின் மூலம் கட்டமைக்கப்பட்டுள்ளது. ' காயம்' என்னும் ஒரு சொல் இடத்தின் தன்மைக்கு ஏற்பப் பொருள் கொள்வதும், வேறு சொல்லாட்சியிலிருந்து அழகுபட தன் சுயத்தில் மட்டும் காணப்படுவதும் தெரிகிறது.*

*உள்மையமாக விளங்கும் கவிதையின் பொருள் வாசகனுக்கு நவீன தன்மையுடைய கவிதையாக்கமாக இக்கவிதை தெரிகிறது. இதே போல் 'ஆட்டம்' எனும் சொல்லை உள்மையமாகக் கொண்டு எழுதப்பட்ட கவிதை உலக இறைத் தத்துவத்தை விளக்குவதாக அமைந்துள்ளது. அக்கவிதை,*

*"உடுக்கையடியில்
ஓராயிரம் உலகங்கள்
அவரவர் ஆடுகளத்தில்
ஆயிரம் சாமிகள்
ஆடாத ஆட்டமில்லை
ஆடாமல் இருக்க
வழியுமில்லை."*

*என்பதாகும். இக்கவிதையில் ஒவ்வொரு சொல்லும் விளக்கும் பெரும் பொருள் ஆன்மீகத்தின் ஞானத்தை விளங்கிக் கொண்டவர்களுக்குத் தெளிவாகவும், தேடலைக் கொண்டவர்களுக்குத் தெளிந்த ஞானத்தை இறுதியில் தருவதாகவும் அமைந்திருக்கின்றது. மறைபொருள் ஒரு கவிதையின் தேடலை அனுபவத்தின் துணையுடன் சாத்தியமாக்குகிறது என்ற*

கோட்பாட்டுச் சிந்தனை இக்கவிதையில் நவீனத்துடன் வெளிப்பட்டிருக்கின்றது. எந்தக் கோணத்தில் எவர் வாசிப்பினும் அவரவர்களுக்கு வேறு வேறு பாங்கில் நயம் கொள்வதும், மையப் பொருளிலிருந்து விலகாமல் இருப்பதுமான உறுதித் தன்மையையும் பெற்றிருக்கிறது இக்கவிதை.

கவிஞர் முத்தமிழ்விரும்பியின் கவிதைகளில், சொல்லாடல்கள் நவீன வெளிப்பாட்டுத் தன்மையினைக் கொண்டிருக்கின்றன என்பதைப் பல கவிதைகள் மெய்ப்பிக்கின்றன.

மற்றொரு நவீனக் கவிதையான ஹைபுன் கவிதை வடிவில் அதிகமாகக் கவிதை எழுதிய பெருமை, கவிஞர் முத்தமிழ்விரும்பிக்குத் தான் உண்டு என்று கூறலாம். வடிவத்தால், உணர்வால், நிகழ்வு பதிவுகளால், இக்கவிதை வடிவம் பெருமளவுத் தமிழ்ப் படைப்பாளர்களால் எழுதப்பட்டும் வாசகர்களால் வாசிக்கட்டும் வருகின்றன.

"செறிவான உரை வீச்சில், முரணான நிகழ்வுகளை இணைத்தும், ஒரே விதமான சம்பவங்களைக் கோர்த்து, அதற்கு இணையான ஒரு செறிவான ஹைக்கூவோடு நிறைவு செய்வதே ஹைபுன் ஆகும்" என்று அன்பாதவன் அதன் இலக்கணத்தை விளக்குவார். ஹைபுன் என்பது ஹைக்கூவும் உரைநடையும் இணைந்த அர்த்தநாரி வடிவமாகும். மேலும், நிறையக் காட்சிப் பின்புலங்களோடு உணர்வு வெளிப்பாடுகள், சமூகத் தாக்கங்கள் அவற்றில் நேரடியாகவோ மறைமுகமாகவோ வெளிப்பட்டு நிற்கலாம்.

கவிஞர் முத்தமிழ்விரும்பி சமூகம் சார்ந்த சிந்தனைகளை மற்றும் தன் அக உணர்வுகளை வெளிப்படுத்தும் போதெல்லாம் ஹைபுன் வடிவத்தில் தான் அதிகமாகக் கவிதை புனைந்துள்ளார். அவ்வடிவம் அவரின் உள்ளுணர்வுகளை சரியான வார்த்தைகளை வெளிக்கொண்டு வர ஏதுவாக இருந்திருக்கிறது. சில கவிதைகளில் சர்ரியலிசத்துடன் ஒவ்வொரு நிகழ்வுக்கும் தொடர்பற்ற நிலையில் ஒரு பிணைப்பைத் தந்து முன்பின் நிகழ்வோட்டங்களை கோர்வையாக்கி ஹைபுன் வடிவமாகக் கவிதைகளை எழுதியிருக்கிறார்.

'நுண்கலை மருத்துவன்' நூலில் உள்ள பல கவிதைகள் இவ்வடிவினதாகும். 'காற்றும் மழையும்' என்னும் கவிதையில் கிராமத்தின் சுதந்திரமான வாழ்வில் நடக்கும் நிகழ்வுகளையும், அதனுள் பழங்கால நினைவுகளின் ஏக்கம், பரிதவிப்பு, பாசம், ஒற்றுமை, அறிவுரை, இயல்புத்தன்மை ஆகியவற்றின் வெளிப்பாடுகளையும் அப்படியே படம்போல் காட்சிப்படுத்தியுள்ளார். சிறு

சிறு பாச உணர்வுகளின் வெளிப்பாடுகள், இதுதான் வாழ்க்கை என்பதைக் காட்டுகின்றன. ஆனால், மனிதன் இதை விட்டுத் தூரமாக எங்கோ ஒரு இயந்திர வெளியில் மனிதனாக இல்லாமல் வாழ்ந்து விட்டுப் போகிறான் எனும் கருத்தும் இதனுள் காணப்படுகின்றன. இயற்கையை அறிதல் என்பது தான் உண்மையான உலகைப் புரிந்து கொள்ளுதல் என்பதை இது போன்ற பல கவிதைகளில் நிதானத்துடனும், கோபத்துடனும், அன்புடனும் வெளிப்படுத்தியுள்ளார் கவிஞர் முத்தமிழ் விரும்பி.



'ஆடி அமாவாசை' என்னும் கவிதையில் நெருடலற்ற முரணான பல காட்சிகள் ஒன்றிணைக்கப்பட்டு நெடுங்கதையாக அதிலும் சொல்லப்பட்டிருக்கிறது. 'காற்றும் மழையும்' எனும் கவிதையை மட்டும் ஹைபுன் கவிதைக்கு உதாரணமாய் இங்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

''கிழக்குத் திசையில்
வளைந்த உருவம்
இடுங்கிய கண்கள்
ஒடுங்கிய உடலாக
வந்துகொண்டிருந்தார்.

வீட்டு வாசலில் நின்று
வெட்டப்பட்ட சப்போட்டா மரத்தின்
கிளைகளின் தளிர்களைப்

பார்த்துக்கொண்டிருந்தான்.

வாசலில் நிதானித்து
கண்களை விரித்து
இந்த வீட்டுப் புள்ளையா என்றார்
ஆமாம்
என்னம்மா வேண்டும் என்றான்

நான்
கிழக்க வூட்டு
ராமச்சந்திரன் அம்மாப்பா
என்றே நகர்ந்தார்

ஓ
ராமச்சந்திரன் அம்மாவா
யோசிக்க இரண்டரை மணி நேரம் பிடித்தது
ரவிச்சந்திரன் ராமச்சந்திரன்
ஓ இரட்டைப் பசங்கள்
ஒருத்தன் சேப்பா
இன்னொருத்தன் மாநிறமா

நண்பகல் உணவை முடித்துக் கொண்டு
செவ்விளநீர் குவலை மரத்திற்கு
கல்லுப்பு வைத்துக் கொண்டு இருந்தான்

தம்பீ
நிமிர்ந்தான்
சிரித்தவாறு மேற்குத் திசையிலிருந்த
பெட்டிக்கடையிலிருந்து
நகர்ந்து வந்து
தென்னம்பிள்ளையை நல்லா
பராமரிச்சாத்தான் உண்டு என்றார்

தலையாட்டத்
திரும்பிப் பார்த்து
ஒருத்தன் வேன்ல ஓடுறான்
மூணு புள்ளைங்க

இன்னொருத்தன் சரக்கு மாஸ்டர் என்று
கலுக்கென்று சிரித்துக் கடந்தார்

இது -மிதமான வேகத்தில்
காற்றும் மழையும் பதிவாகும்
காலம் “

ஹைபுன் கவிதைகளில் சில இடங்களில் படிமங்களாகவும் காட்சிகள் விளக்கப்படுகின்றன. கவிஞன் தனது ஆழ்ந்த புலமைத்துவத்தில் ஒன்றை மற்றொன்றாகக் கூறியும் அதனை வாசகனுக்குச் சரியாகப் புரிய வைக்க முயல்கின்றான். அதனை மேற்கண்ட கவிதையில்,

”வீட்டு வாசலில் நின்று
வெட்டப்பட்ட சப்போட்டா மரத்தின்
கிளைகளில் தளிர்களைப்
பார்த்துக் கொண்டிருந்தான் “
என்னும் வரிகளில் மரம் காலத்தின் படிமமாக நிற்கிறது. பின்னோக்கிச் சென்று தம் வாழ்நாளில் நடந்த ரசனையான நிகழ்வுகளை நினைப்பது என்பது அதைச் சரியாகப் பதிவு செய்ய, வார்த்தைகளால் வடிப்பதும் சிறப்பானதாகும்.




முழுமையான கவிதையில் கிழக்குத்திசை, மேற்குத்திசை, பெட்டிக்கடை, தென்னம்பிள்ளை, சப்போட்டா மரம் போன்ற சொற்கள் ஆழமான படிமப் பொருளோடு வாசகனின் எண்ணப் போக்கைக் காட்சிப் பின்புலத்திலிருந்து

வேறு வேறு அர்த்தங்களைப் புரிந்து கொள்வதற்கும் ரசித்துக் கொள்வதற்கும் பயன்படுத்தப்பட்டிருக்கிறது.



கவிதைகளில் படிமம் இடம்பெறும்பொழுது கவிதையின் வீச்சு பெருமளவிற்குச் சிறப்பாய் உயர்ந்து விடுகிறது. "படிமம் என்பது வெறுமனே வர்ணிப்பு புத்தி அல்ல. நுண்பொருளைப் பருப்பொருளாக உணர்த்துவது. பருப்பொருளை நுண்பொருளாக உணர்த்துவது" என்பர் தி சு நடராஜன். இக்கோட்பாட்டை இக்கவிதைத் தொகுப்பில் அதிகமாகக் காணலாம்.

கவிஞர் முத்தமிழ்விரும்பியின் கவிதைகள் ஒவ்வொன்றும் நவீன இலக்கியக் கோட்பாடுகளைத் தாங்கி நிற்கின்றன. அதோடு பிரிவுத் துன்பம் குறித்த கவிதைகள், எதார்த்த கவிதைகள் போன்ற கவிதைகளோடு காதல் கவிதைகளும் எழுதப்பட்டிருக்கின்றன. இவை பிற கவிஞர்களின் கவிதைகளோடு, பொதுவான கவிதை மரபுகளோடு கவிதை வடிவங்களோடு கூடுமானவரை ஒத்து இல்லாமல், தனிப்பட்ட தன்மையில் நவீன வடிவத்தைத் தாங்கி நிற்கின்றன என்பதுதான் கவிஞர் முத்தமிழ்விரும்பியின் தனித்தன்மையாகும்.

தமிழகத்தில் உண்மை முகமானவர்களின் தரவுகள் அச்சப்படாமல் கவிதை ஆக்கப்பட்டுள்ளன. மன்னர்கள், வீரம், பண்பாடு, சிதைவுகள் இவற்றைக் காணும் கவிஞர் பொங்கி எழுகிறார். யார் என்றும் பாராமல் சாடுகின்றார். இதற்கு 2020 தை மாதத்தில் இன்று கவிதை ஒரு சாட்சியாகும் தஞ்சை பெரிய கோயிலை மையம் வைத்து இவர் பாடியிருக்கும் கவிதை அரசியல் வரலாற்றின் அடித்தளத்தோடு கொடுவாள் கொண்டு எதிரிகளை விரட்டுகிறார் சமூக சாடலைக் கூற ஏராளமான கவிதைகளை இவர் எழுதியிருக்கிறார்

பல மேலைநாட்டு இஸங்கள் அவரது கவிதைகள் வழி விளக்கப்படலாம். உளவியல், அழகியல், பின்நவீனத்துவம், மிகையதார்த்தவியல் கவிதைகள் இவரது கவிதைகளில் ஏராளம் ஏராளம். அவை ஒவ்வொன்றையும் பிறரின் கவிதைகளோடு ஒப்புமைப்படுத்தி அடுத்தடுத்த கட்டுரைகளில் காண்போம்.

# மதுரை பெண் கல்வி வரலாற்றில் கிறிஸ்தவர்களின் பங்களிப்பு

*(Friends of Madurai Trust இன் மூதூர் மதுரை நுண் ஆய்விருக்கையின் மெய் நிகர் கூட்டத்தில் நிகழ்த்திய உரை – 26/07/2023)*



***சுந்தர் (சித்திரவீதிக்காரன்),***
*லேடி டோக் கல்லூரி. மதுரை*

**மூதூர் மதுரை**

*விழவு மலி மூதூர் என்றும் மண மதுரை சிலம்பு (24:5) என்றும் கிழக்கின் வெனிஸ் நகரம் என்றும் பாராட்டப்படும் மதுரை மாநகர் 6000 ஆண்டுகள் பழமையானது. இங்குத் தொடர்ந்து மக்கள் வசித்து வருகின்றனர். அன்று முதல் இன்று வரை பண்பாட்டுச் சிறப்புடைய பேரூராக மதுரை விளங்குகின்றது. கி.மு. நான்காம் நூற்றாண்டு முதல் இரண்டாம் நூற்றாண்டு வரை இருந்த கடைச்சங்க காலத்தில் மதுரையில் தமிழ்ச்சங்கம் சிறப்பாக இயங்கியது. அதற்கு மாங்குடி மருதன் தலைவனாக இருந்தார் என்பதற்கு இலக்கியச் சான்றுகள் உண்டு .*

*ஏறுதழுவுதல், தண்ணீர்ச் சடங்குகள் செய்தல் (தவளை மற்றும் நாரைக்கு முக்தி அளிக்க கள்ளழகர் வருகை) போன்ற வளமைச் சடங்குகள் பல்லாயிரம் ஆண்டு காலமாக மதுரையில் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. இவை ஆதி மனிதனிடம் இருந்த மந்திரச் சமயச்சடங்கு முறைகள் (magico religious rituals) ஆகும்.*

*மதுரை மாநகர் தமிழகத்தின் மூன்றாவது பெரிய நகரமாகவும் தேசிய அளவில் 44 வது பெரிய நகரமாகவும் தற்காலத்தில் விளங்குகிறது. இப்பண்பாட்டுச் சிறப்புடைய மாநகரில் கல்வி அறிவு பெற்றோர் 82 சதவீதம் பேராவர். தேசிய அளவில் இது 78% மட்டுமே.*

**இலக்கியம் & புராணங்களில் மதுரை**

*மதுரை மாநகர் பற்றி பல பண்டைய இலக்கியங்களும் புராணங்களும் குறிப்பிட்டுள்ளன. வால்மீகி ராமாயணம் மதுரை மாநகரின் கோட்டைக் கதவுகள் பொன் மற்றும் முத்துக்களால் அலங்கரிக்கப்பட்டவை என்கிறது. வியாசரின் பாரதம் அர்ஜுனன் பாண்டிய இளவரசியைத் திருமணம் செய்த*

*தகவலைக் குறிப்பிட்டுள்ளது. இலங்கையின் வரலாறு கூறும் மகாவம்சம் 570 ஆம் ஆண்டு எழுதப்பட்டது. இந்நூல் இலங்கை மன்னன் விஜயன் பாண்டியன் மகளை மணம் புரிந்த வரலாற்றை எடுத்து இயம்புகின்றது. சாணக்கியரின் அர்த்தசாஸ்திரம் (370 முதல் 283) பாண்டிய நாட்டு முத்துக்கள் பற்றியும் பாண்டிய நாட்டில் நெய்யப்படும் மெல்லியத் துகில் பற்றியும் குறிப்பிட்டுள்ளது. கிரேக்கப் பயணி மெகஸ்தனிஸ் (350 முதல் 290) கி முஉணராம் நுற்றாண்டைச் சேர்ந்தவர். இவர் பாண்டிய நாட்டைப் பற்றிச் சிறப்பாக குறிப்பிட்டுள்ளார். வரலாற்று ஆய்வாளர்களான ப்ளைனி (61 முதல் 112) டாலமி (90 முதல் 168), ஸ்ட்ராபோ (63 முதல் 24) ஆகியோர் மதுரை மாநகரின் சிறப்புகளையும் பாண்டிய மன்னனைப் பற்றியும் வியந்து தங்களது பயணக் குறிப்புகளில் குறிப்பிட்டுள்ளனர்.*

### ஆட்சி வரலாறு

*தொடக்கத்தில் சங்க கால பாண்டியரின் தலைநகராக மதுரை விளங்கியது. பின்பு களப்பிரர்கள் கைப்பற்றினர். கிபி 590 இல் மீண்டும் பாண்டியர் கைப்பற்றி ஆட்சி செய்தனர். ஒன்பதாம் நூற்றாண்டுக்குப் பிறகு சுமார் 300 ஆண்டு காலம் சோழர்களின் ஆட்சியின் கீழ் மதுரை மாநகர் இருந்தது. மதுரையை வெற்றி கொண்ட சோழன் மதுராந்தகன் எனப்பட்டான். 12 ஆம் நூற்றாண்டில் மதுரையை மீட்ட சுந்தரபாண்டியன் மதுரையில் ஆன்டசிக்கட்டிலேறி பல கோயில் திருப்பணிகளையும் மக்கள் நலப் பணிகளையும் செய்தான். ஒரு நூற்றாண்டு காலம் பாண்டியரின் ஆட்சியின் கீழ் இருந்தமதுரை பிறகு டெல்லி சுல்தான்களின் பிடியில் சிக்கிக் கொண்டது. டெல்லி சுல்தான்களிடம் இருந்து பிரிந்து மதுரை சுல்தான்கள் தனி அரசு நடத்திய போது அவர்கள் ஆட்சியின் கீழ் மதுரை இருந்தது. கி.பி. 1378க்கு பிறகு விஜயநகர பேரரசு மதுரையைக் கைப்பற்றியது. இவ்வரசு சனாதன தர்மத்துக்குத் துணை போயேற்று. அந்தணர்களின் அதிகாரம் கொடி கட்டிப் பறந்தது. இவ்வரசு தனது பிரதிநிதியாக நாகம நாயக்கரை நியமித்தது. ஆனால் நாயக்கர்கள் 1559 முதல் மதுரையைத் தங்கள் வசமாக்கினர் 1736 வரை மதுரை நாயக்கர்களின் ஆட்சியில் மதுரை இருந்தது அப்போது பல வைணவக் கோயில்கள் கட்டப்பட்டன. சிவன் கோயில்களும் புனரமைக்கப்பட்டன.*

### இஸ்லாமியர் ஆட்சியில் மதுரை

*கி.பி.1740 முதல் 1754 வரை சந்தா சாகிப் மதுரையை ஆட்சி செய்தார். பின்பு ஆற்காடு நவாப் மற்றும் மருதநாயகம் எனப்படும் கான்சாகிப் 1725 முதல் 1764 வரை ஆட்சி செய்தனர். கிழக்கிந்திய கம்பெனி கி.பி.1801 மதுரையை கையப்படுத்தியது. 1947இல் இந்தியா சுதந்திரம் அடைந்தபோது மதுரையும் விடுதலை பெற்றது. மதுரை மாநகர் இந்து முஸ்லிம் பௌத்தர் சமணர் என்று*

*பல சமயங்களைச் சேர்ந்த மன்னர்களின் ஆட்சியின் கீழ் இருந்தாலும் தன்னுடைய பழமையையும் பண்பாட்டையும் ஒருபோதும் இழக்கவில்லை.*

**இலக்கியம் காட்டும் மதுரை**

*மதுரை மூதூரின் சிறப்புகள் பற்றி பண்டைய சங்கத் தமிழ் இலக்கியங்களில் மதுரைக்காஞ்சி, பரிபாடல், சிலப்பதிகாரம் ஆகியவை சிறப்பாக எடுத்துக் கூறுகின்றன. மதுரைக்காஞ்சி மதுரையின் பெயரால் தோன்றிய சங்க நூலாகும். பரிபாடலில் மதுரை பற்றி சில பாடல்கள் மட்டும் கிடைத்திருக்கின்றன சிலப்பதிகாரத்தில் இரண்டாவது காண்டம் மதுரை காண்டம் என்ற பெயரில் இருந்தாலும் மதுரை பற்றிய பாடல் வரிகள் நகர் காண் காதையில் இடம் பெற்றுள்ளன. காலத்தால் பிற்பட்ட 14 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பரஞ்சோதி முனிவர் எழுதிய திருவிளையாடல் புராணத்தில் மதுரையில் சிவபெருமான் நடத்திய திருவிளையாடல்கள் பட்டியலிடப்பட்டுள்ளன. ஆனால் திருவிளையாடல் புராணம் என்ற நூல் மூல நூலன்று. அது ஒரு மொழிபெயர்ப்பு நூலாகும். வடமொழியில் தோன்றிய நூலினுடைய மொழிபெயர்ப்பாக மூன்று திருவிளையாடல் புராண நூல்கள் தமிழில் வந்தன. அவற்றில் மக்களிடம் மிகுந்த செல்வாக்கு பெற்ற நூல் பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடல் புராணம் ஆகும்.*

***நான் மாடக் கூடல்***

*மதுரையை கூடல் மாநகர் என்று குறிப்பிடும் வழக்கத்தை காண்கிறோம். பொய்யா விழாவின் கூடல் பறந்தலை என்ற அகநானூற்றுப் பாடல் வரி கூடல் நகரில் போர்க்களம் இருந்ததையும் குறிப்பிடுகின்றது.*

*யாம் வேண்டும், வையைப் புனல் எதிர்கொள் கூடல் என்ற வரி பரிபாடலில் (10:40) காணப்படுகின்றது*

*நான் மாடக் கூடல் நகர் (பரிபாடல் திரட்டு, 6)*
*நெடுநீர் மலிபுனல் நீளமான கூடல் (பரிபாடல் 20:106)*

*மாடம் பிறங்கிய மலிபுகழ் கூடல் ( மதுரைக் காஞ்சி-42) போன்ற அடிகள் வையையின் வெள்ளப் பெருக்கையும் மாடமாளிகைகள் நிறைந்த மதுரை மாநகரின் வளத்தையும் குறிப்பிட்டுள்ளன. பரிபாடல் திரட்டு (11) கூறும் சேய் மாடக் கூடலும் செவ்வேள் பரங்குன்றும், வாழ்வாரே வாழ்வார் எனப்படுவார், மற்றையர் போவார் யார் புத்தேள் உலகு?*

*என்ற அடிகள் மதுரையிலும் திருப்பரங்குன்றத்திலும் வாழ்வாரே வாழ்பவர்கள் எனப்படுவர் இவர்களை தவிர வேறு யார் புத்தேள் உலகு என குறிப்பிடப்படும் சொர்க்கத்திற்கு செல்வார்கள். என்ற வினாவை முன்வைக்கின்றது. ஆக மதுரையில் வாழ்ந்தாலே முக்தி என்ற பொருள் இப்பாடல் மூலம்*

கிட்டுகின்றது. பரிபாடல் மதுரையை பற்றிய சில தகவல்களை குறிப்பாக புயது வெள்ள நீர் வரும்போது அதில் புனலாடும் காதலர்கள் பற்றிய தகவல்களை விரிவாக எடுத்துரைக்கின்றது. ஆனால் பரிபாடல் திரட்டு மதுரையின் சிறப்புகளை வரிசையாக எடுத்துரைக்கிறது.

நெல்லும் நீரும் எல்லாருக்கும் எளிய என,
வரைய சாந்தமும் திரைய முத்தமும்,

இமிழ்குரல் முரசு மூன்றுடன் ஆளும், தமிழ்கெழு கூடல் என்று புறநானூறு குறிப்பிடுகின்றது. மதுரை வாழ் மக்களுக்கு நெல்லும் நீரும் மலையில் கிடைக்கும் சந்தனமும் கடல் முத்தும் தாராளமாகக் கிடைக்கும்.

தமிழ் நிலை பெற்ற தாங்கரும் மரபின், மகிழ்நனை மருகின் மதுரை
என்கிறது சிறுபாணாற்றுப்படை *(66, 67)*



மாட மதுரை என்ற சொல் மாடங்களைக் கொண்டுள்ள காவல் அரண் மிகுந்த மாளிகை அல்லது பெரிய வீடுகளை கொண்ட மதுரை என்று பொருள் தருகிறது. பின்னர் வந்த புராணங்கள் சில கதைகளை உருவாக்கி மாடங்கள் என்பன மதுரையைச் சுற்றியுள்ள பசுமலை, நாகமலை, யானைமலை, போன்ற காவல் மலைகளை குறிப்பதாகப்.பொருள் உரைத்தன. சிவனை அழிப்பதற்காக சைவர்களை ஒழிப்பதற்காக ஏவி விடப்பட்ட பகைக்கருவிகள் பசு, நாகம், யானை ஆகியன என்று புராணங்கள் குறித்தன. இவற்றைச் சிவபெருமான் கல்லாக்கி ஆங்காங்கே நிறுத்திவிட்டார். இவை நான்கும் மதுரைக்குரிய மாடங்கள் என்பதால் 'நான் மாடக்கூடல்' என்று மதுரை ஆய்க்கப்பட்டது என்ற விளக்கத்தை புராணங்கள் கூறின. நான் மாடக் கூடல் என்பதை மாட மாளிகைகள் கொண்ட மதுரை மாநகர் என்று பொருள் கொள்வதே பொருத்தமானதாகும்.

***தாமரை போன்ற மதுரை***

*எட்டுத்தொகையில் உள்ள பரிபாடல் மதுரை பற்றி எட்டு பாடல்களில் விளக்குகிறது. இப் பரிபாடல் ஆசிரியப்பா வெண்பா கலிப்பா வஞ்சிப்பா ஆகிய நான்கு பாவகைகளிலும் சேராதது. வெண்டளையும் ஆசிரியத்ளையும் விரவி வருவது. துள்ளல் ஓசை கொண்டது. இதில் 70 பாடல்கள் எழுதப்பட்டதாகவும் அவற்றில் தற்போது இருபத்திரண்டு மட்டுமே கிடைத்துள்ளதாகவும் தெரிவிக்கின்றனர். திருமால் பற்றி ஆறு செவ்வேள்*




மதுரை நகரின் மையப் பகுதியையும் முக்கிய இடங்களையும் காட்டும் வரைபடம்

*எனப்படும் முருகன் பற்றி எட்டு வையை பற்றி எட்டு மதுரை பற்றி நான்கு பாடல்கள் தான் இன்றைக்கு நமக்கு கிடைத்துள்ளன. ஒவ்வொரு பரிபாடலின் கீழும் பாடியவர் பெயரும் அதற்கு இசை அமைத்தவர் பெயரும் பண்ணும் குறிப்பிடப்பட்டு இருப்பதால் இவை பண்ணிசை பாடல் என்று அறியப்படுகிறது இப் பரிபாடல் மதுரை மாநகரைப் பற்றி குறிப்பிடும் பொழுது மாயோனின் கொப்பூழில் மலர்ந்த தாமரைப் பூவோடு உவமிக்கின்றது. தாமரைப் பூவின் இதழ்களை தெருக்கள் என்றும் இதழ்களின் நடுவில் இருக்கும் பொகுட்டு மதுரை மாநகரின் நடுவில் அமைந்திருக்கும் கோவில் என்றும் குறிப்பிடுகின்றது. மதுரை இன்றும் இதே வடிவமைப்பில் கோயிலைச் சுற்றிலும் அடுக்கடுக்காக நாற் சதுரமான தெருக்களைக் கொண்டு அமைந்துள்ளது. நடுவில் கோவில் இருக்க கோவிலை சுற்றி சித்திரை வீதி, ஆவணி மூல வீதி, மாசி வீதி என்று தமிழ் மாதங்களை கொண்ட வீதிகள் சதுர வடிவில் அமைந்துள்ளன.*

**நவீன மதுரை உருவாக்கம்**

*கிபி 1937இல் மாரட் என்ற ஆங்கிலேயர் மதுரையை மறு வடிவமைப்புச் செய்ய திட்டமிட்டார். கோயிலின் கோட்டைகளையும் இடிக்கவும் அகழிகளைத் தூர்த்து மேடாக்கவும் கட்டளையிட்டார். அவரவர் இடிக்கும் கோட்டை பகுதியை நிரப்பும் அகழிப்பகுதியை அவர்கள் உடைமையாக்கிக் கொள்ளலாம் என்றார். அப்போது பெருமாள் மேஸ்திரி என்பவர் அப்பணியை ஏற்று செவ்வனே செய்து முடித்தார். எனவே அவர் பெயரால் அங்கு பெருமாள் மேஸ்திரி தெருவும் ஆங்கிலேயரான மாறட் பெயரால் மேல மாறட், வீதி கீழமாறட் வீதி என்று வீதிகளும் பெயரிடப்பட்டன.*

**மாதங்களின் பெயரில் மதுரை வீதிகள்**

*மதுரையில் உள்ள மீனாட்சி அம்மன் கோவிலுக்குள் உள்ள காணப்படும் ஆடி வீதியில் அம்மன் மட்டுமே ஆடி மாதம் உலா வருவார். அம்மன் பூப்படைந்த நாளை கொண்டாடுகின்ற விழா என்பதினால் அந்தப் பத்து நாட்களும் அம்மன் மட்டுமே தனியாக ஆடி வீதியில் வலம் வருவார். கோவிலுக்கு வெளியே நான்கு புறமும் உள்ள சித்திரை வீதியில் அதிக அளவில் மக்கள் கூடி நின்று திரைகளில் திருக்கல்யாணக் காட்சியை கண்டு மகிழ்வர். ஆவணி மூல வீதி என்று நான்கு திசைகளிலும் வீதிகள் உண்டு. சித்திரையில் பட்டாபிஷேகம் செய்யப்படும் போது மீனாட்சியின் கையில் கோயில் தக்கார் செங்கோலை வழங்குவார். அந்தச் செங்கோல் ஆவணி மாதம் மூல நட்சத்திரத்தன்று சுவாமி சொக்கநாதரின் கைக்கு மாற்றப்படும். அன்று முதல் அவர் மன்னராக இருந்து மதுரையை ஆட்சி செய்கின்றார். அப்போது பத்து நாட்கள் திருவிளையாடல் புராணத்தில் வரும் கதைகளை ஒவ்வொரு நாளும் ஒவ்வொன்றாக நடத்தி காட்டி விழா கொண்டாடுவர். அந்த பத்து நாட்களில் சாமி ஆவணி மூல வீதிகளில் நகர்வலம் வரும். கரிக்குருவிக்கு உபதேசம் செய்தது, நாரைக்கு முத்தி கொடுத்தது, மாணிக்கம் விற்ற லீலை, தருமிக்குப் பொற்கிழி வழங்கியது, புட்டுக்கு மண் சுமந்தது போன்ற திரு காட்சிகள் நடைபெறும். பிட்டுக்கு மண் சுமந்த வரலாற்றை நடத்திக் காட்டுவதற்கு சொக்கர் வைகை கரைக்கு வந்து அங்குள்ள மண்டபத்தில் இருந்து அருள் பாலிப்பார்.*

*ஆவணி மூல வீதிகளுக்கு அடுத்து உள்ள மாசி வீதிகள் மதுரையின் தேரோடும் வீதிகள் ஆகும். மீனாட்சி அம்மனுக்கும் சொக்கநாதர்க்கும் திருமணம் முடிந்த மறுநாள் தனித்தனியாக ஆளுக்கு ஒரு தேரில் அவர்கள் மாசி வீதியில் வலம் வருவார்கள்.*

**காந்தியடிகளும் மதுரையும்**

*1885 ஆம் ஆண்டு மறு அளவீடு செய்யப்பட்டு நகராட்சி தகுதி பெற்ற மதுரை மாநகருக்கு 1921ல் காந்தியடிகள் வருகை தந்தார். அவர் ரயிலில் பயணம் செய்து*

*வரும் வேளையில் வயல்களில் வெறும் வேஷ்டியை மட்டும் முழங்காலுக்கு மேல் கட்டிக்கொண்டு மேல் சட்டை இன்றி விவசாய வேலைகள் செய்து வந்த உழவர்களைப் பார்த்து இவர்கள் இவ்வளவு துன்பப்படும்போது நான் மட்டும் ஏன் இத்தனை உடைகளை உடுத்திக் கொள்ள வேண்டும் என்று நினைத்தார். அன்று முதல் அவர் மேல் சட்டை அணிவதையும் தலைக்கு தலைப்பாகை அணிவதையும் நிறுத்திவிட்டார். அரையாடை மட்டும் உடுத்தினார்.*

**கோயில் நுழைவுக்கு முதல் அனுமதி**

*1939இல் கோயில் நுழைவுப் போராட்டத்திற்கு சத்தியமூர்த்தி தலைமை தாங்கினார். அப்போது சென்னை மாகாணத்தின் கவர்னர் ஜெனரலாக இருந்த ராஜாஜி சத்யமூர்த்திக்கு ஆதரவளித்து அதுவரை கோவிலுக்குள் செல்லக்கூடாது என்று தடுக்கப்பட்ட நாடார்களுக்கும் தலித் இன மக்களுக்கும் தடையை நீக்கினார். தமிழ்நாட்டில் ஒடுக்கப்பட்டோர் கோவிலுக்குள் வர தடைகள் இருந்து வந்த காலத்தில் முதன் முதலாக அத் தடை உடைக்கப்பட்டு கோவிலுக்குள் அனுமதி அளிக்கப்பட்ட பெருமை மதுரை மாநகருக்கு உரியதாகும்.*



***மதுரை மக்கள்***

*உலக சுகாதார நிறுவன ஆய்வில் மாசில்லா நகரம் என்று பாராட்டப்பட்ட மதுரை மாநகர் தமிழகத்தின் இரண்டாவது பெரிய மாநகராட்சி ஆகும் உயர் நீதிமன்றத்தின் கிளை மதுரை மாநகரில் இருப்பது குறிப்பிடத்தக்கது. இங்கு சுமார் பத்து லட்சம் மக்கள் வசிக்கின்றனர். 1951ல் மூன்று லட்சம் பேர் இருந்தனர். 2011 இல் கணக்கெடுப்பில் மக்கள் தொகை 10 லட்சமாக வளர்ந்திருந்தது. இவர்களில் இந்துக்கள் 86 சதவீதம் முஸ்லிம்கள் 8% கிறிஸ்தவர்கள் ஐந்து சதவீதமும் வாழ்கின்றனர்.*

*விழவு மலி மூதூர் மதுரை எப்போதும் விழாக்கோலம் கொண்டிருக்கும் ஊர் ஆகும் மதுரை மீனாட்சி அம்மன் கோவிலில் மாதம்தோறும் விழாக்கள் நடைபெறும். சித்திரை மாதம் சித்திரைத் திருவிழா நடைபெறும். அப்போது மீனாட்சி பட்டாபிஷேகம், திருக்கல்யாணம், தேரோட்டம் போன்ற சிறப்பு நிகழ்ச்சிகள் உண்டு. வைகாசி மாதம் வசந்த விழா நடைபெறும். அப்போது பத்து நாட்கள் சாமியும் அம்மனும் எண்ணெய்க்காப்பில் இருப்பார்கள். ஆனி மாதம் ஆனித் திரு ஊஞ்சல் விழா மக நட்சத்திரம் முதல் மூல நட்சத்திரம் வரை 10 நாட்கள் நடைபெறும். அப்போது நூற்றுக்கால் மண்டபத்தில் சாமியும் அம்மனும் ஊஞ்சலில் இருப்பதைக் காணலாம். ஆடி மாதம் அம்மனுக்கு மட்டும் பூப்பு திருவிழா நடையிரும். அம்மமன் மட்டும் ஆடி வீதியில் வலம் வருவார். பிங்ங் மாதத்தில் முளைக்கொட்டுத் திருவிழாவும் நடைபெறும். ஆவணி மாதம் மூலத் திரு நாள் அன்று சாமிக்கு பட்டாபிஷேகம் நடந்து பத்து நாள் திருவிழா நடைபெறும். புரட்டாசி மாதம் நவராத்திரி விழா நடைபெறும். ஐப்பசி மாதம் பிரதமை முதல் சஷ்டி வரை ஆறு நாட்கள் கோலாட்டம் நடக்கும். கார்த்திகை மாதம் தீபத்திருவிழா நடக்கும். மார்கழி மாதம் பாரவை நோன்பு நோற்ற பெண்கள் திருவெம்பாவை பாடும் விழா நடைபெறும். அப்போது பத்து நாள் எண்ணெய்க் காப்பும் உண்டு. தை மாதம் தெப்பத் வண்டியூர் மாரியம்மன் கோவில் தெப்பக்குளத்தில் தெப்பத் திருவிழா நடைபெறும். மாசியில் தொடங்கி பங்குனிஇலும் தொடர்ந்து 48 நாட்கள் மண்டல உற்சவம் நடைபெறும். பங்குனி மாதம் தனியாக பங்குனி உத்திரத் திருவிழா கார்த்திகை நட்சத்திரத்தில் தொடங்கி உத்திரம் வரை நடைபெறும். சாரதா நவராத்திரி விழாவும் உண்டு. பங்குனி உத்திரத்தில் முருகன் திருமணம் நடைபெறுவதால் அம்மனும் சாமியும் திருப்பரங்குன்றத்திற்கு திருமண விழாவிற்கு சென்று வருவதும் உண்டு. இவ்வாறு 12 மாதங்களும் மதுரையில் திருவிழாக் கோலமாகவே இருப்பதால் மதுரையை விழவு மலி மூதூர் என்று அழைப்பார்கள்.*

*இவை தவிர மார்கழி மாதம் நடைபெறும் அஷ்டமி சப்பரம் என்ற ஊர்வலத்தில் அஷ்டமி சப்பரத்தை பெண்கள் மட்டுமே இழுத்துக் கொண்டு வருவார்கள். சாமியும் அம்மனும் எல்லோருக்கும் படி அளக்கும் விழாவில் இருவரும் வயலுக்கு வந்து கதிர் அறுக்கும் வைபவம் நடைபெறும். இது ஒரு அறுவடை திருவிழா. அறுத்த கதிர்களை தங்கள் சப்பரத்தில் கட்டிக்கொண்டு வரும்போது கதிர்களில் உள்ள நெல்மணிகள் கீழே உதிரும். அவற்றை மக்கள் பொறுக்கி தங்களுடைய வீட்டில் கொண்டு போய் வைத்துக் கொள்வார்கள். இதனால் உணவுக்கு பஞ்சம் வராது என்ற நம்பிக்கை உள்ளது. இவ்வாறாக இன்னும் பல திருவிழாக்கள் அம்மனும் சாமியும் வெவ்வேறு கோயில்களுக்கு வருவதாக*

*நடைபெறும். இவை தவிர மதுரையில் இருக்கும் வேறு பல கோயில்களிலும் விதவிதமான விழாக்கள் உரிய காலங்களில் நடக்கும்.*



***அரசியல் சினிமா களத்தில் மதுரை***

*மீனாட்சியம்மன் கோவில் இருக்ககும் மதுரை மத்தியத் தொகுதியில் வெற்றி பெற்ற கட்சியே இது வரை தமிழகத்தின் ஆளுங்கட்சியாக ஒவ்வொரு சட்டமன்றத் தேர்தலின் போதும் வந்துள்ளது. இதனால் தமிழகத்தின் வெற்றியை மதுரை மீனாட்சி தீர்மானிக்கிறாள் என்ற நம்பிக்கையும் மதுரை மக்களிடம் உண்டு. புதிய அரசியல் கட்சி தொடங்குகின்றவர்களும் அரசியலில் ஒரு மாற்றம் கொண்டு வர வேண்டும் என்று நினைப்பவர்களும் மதுரை மக்களின் நாடி பிடித்துப் பார்த்த பின்பு தங்கள் பயணத்தைத் தொடர்வார்கள். எனவே மதுரையில் பொதுக்கூட்டம் நடத்தி அங்கு வரும் மக்களின் கூட்டத்தையும் ஆதரவையும் பார்த்துக் கணித்து பிறகு தங்கள் முடிவு சரியா தவறா என்று பார்ப்பர். தமிழகத்தில் வெளியிடப்படும் திரைப்படங்கள் வசூலில் வெற்றி பெறுமா பெறாதா என்பதை மதுரைத் திரையரங்குகளில் வரும் வசூலைக் கொண்டும் ரசிகர்களின் ஆதரவைக் கொண்டும் கணிப்பார்கள்.*

*எனவே மதுரை என்பது அரசியல், திரையுலகம், இலக்கியம், ஆன்மீகம், கல்வி எனப் பல துறைகளிலும் சிறந்த பண்பாட்டுத் தலமாக அன்று முதல் இன்று வரை விளங்கி வருகிறது.*

# முதன்மை நாயகர் வேதநாயகம்

**பேரா. மு. முத்துவேலு,**
*தமிழ் பேராசிரியர் மாநிலக்கல்லூரி.*
*உறுப்பினர், மாநிலச் சட்ட ஆட்சிமொழி ஆணையம்,*
*சென்னை.*



*பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ்ச் சான்றோர்களில் நீதியரசர் வேதநாயகம் பிள்ளை அவர்கள் தனிச் சிறப்பிடம் வகிக்கின்றார். பல துறைகளில் தமிழ் இலக்கிய வளர்ச்சியில் தன் முதல் பங்களிப்பின் மூலம் அந்தத் துறைகளைத் தோற்றுவித்த முதன்மையாளராகத் திகழ்கின்றார். எனவே அவர் தோற்றுவித்தத் துறைகளுக்கு எல்லாம் அவரே "தந்தை" என்று அழைக்கப்படுகிறார்.*

***தமிழ்ப் புதினத்தின் தந்தை:***

*இனிமைச் சுவைசேர் தமிழானது கவிதைக்கு ஏற்றமொழி என்பது அனைவராலும் ஏற்றுக் கொள்ளப் பட்டதாகும். எனவே அனைத்துக் கருத்துகளும் தமிழில் கவிதை வடிவிலேயே எடுத்துரைக்கப் பட்டன. தமிழில் தொல்காப்பியர் நூல்களைப் பற்றிக் குறிப்பிடும் போது உரை என்பதையும் சுட்டிக் காட்டியுள்ளார். "பாட்டு உரைநூல் வாய்மொழி பிசி" என்று வரிசைப் படுத்துகிறார். இதில் உரை என்ற குறிப்பும் வருகிறது. எனினும் பண்டையத் தமிழ் இலக்கண இலக்கியங்களுக்கு உரை வகுத்த உரையாசிரியர்களே தமிழில் உரைநடை வளர்ச்சிக்கு வித்திட்டவர்கள். ஆனால் ஐரோப்பிய மொழிகளில் தோன்றியதைப் போலத் தமிழில் உரைநடையில் புனைவுகள் தோன்றாமல் இருந்தன. ஆங்கிலக் கல்வியால் தமிழர்களுக்கு ஆங்கில இலக்கியங்களைக் கற்கும் வாய்ப்புக் கிடைத்தது. இதன் பயனாக ஐரோப்பிய இலக்கிய வடிவங்களைத் தமிழுக்குக் கொண்டுவர வேண்டும் என்று விரும்பிப் பலரும் தங்கள் வழியில் முயற்சி செய்தனர். அந்த வகையில் நாவல் எனப்படும் உரைநடையில் அமைந்த புனைவினைத் தமிழில் முதன் முதலில் எழுதிக் காட்டினார் நீதிநாயகம் வேதநாயகம் பிள்ளை. 1857 இல் "பிரதாப முதலியார் சரித்திரம்"என்னும் பெயரில் தமிழில் முதல் நாவலை எழுதினார். அது 1869இல் வெளியிடப் பட்டது. இதனால் இவர் தமிழில் நாவல் இலக்கியத்தின் தந்தை என்ற பெருமைக்குரியவர் ஆனார். கடந்த150 கால நாவல் இலக்கிய வரலாற்றில் எத்தனையோ புதுப் புது முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. ஆனால்*

*இவை அனைத்திற்கும் வித்திட்டவர் வேதநாயகம் பிள்ளை என்பதை நாம் இந்த நாளில் நினைவு கூரவேண்டும்.*

***சட்டத் தமிழ்த் தந்தை:***

*ஆங்கிலேயர் ஆட்சியில் அரசு அமைப்புகளான சட்ட மன்றம், நிருவாகம், நீதிமன்றம் ஆகிய மூன்றிலும் ஆங்கில மொழியே ஆட்சி மொழியாக இருந்தது. மக்கள் உயிரோடும் உரிமையோடும் உடைமைகளோடும் தொடர்புடைய நீதிமன்றங்களின் செயல்பாடுகள் அனைத்தும் பொதுமக்கள் அறிந்து கொள்ள முடியாத ஆங்கில மொழியில் இருந்தன. அந்த நாளில் நீதித்துறையில் பணியில் சேர்ந்து மாவட்ட நீதிபதியாக உயர்ந்தார் வேதநாயகம் பிள்ளை . முதல் இந்திய நீதிபதியான இவர், இந்த நிலை கண்டு மிகவும் வருந்தினார்.*



*நீதிமன்றங்களில் வழக்குத் தொடுப்பவர்கள், மறுப்பவர்கள், வாதிடும் வழக்குரைகள், நீதிமன்றங்களுக்கு வந்திருந்து வழக்கு விசாரணையைப் பார்க்கும் பொதுமக்கள் ஆகிய அனைவரும் தமிழர்களாக இருக்கும் போது, இவர்கள் வழக்குகளை யாருக்காக ஆங்கிலத்தில் நடத்துகிறார்கள்? நீதிமன்றத்தில் கூடி இருக்கும் எவருக்கும் புரியாத மொழியில் நீதிமன்ற நடவடிக்கைகள் இருப்பதானது, வந்திருப்பவர்கள் முகத்தில் கரியைப் பூசுவதைப் போல அல்லவா இருக்கிறது? என்று மனம் நொந்து நின்றார். எனவே இந்தக் குறைபாட்டை நீக்குவதற்காக முதல் நிலையில் அக் காலத்தில் "சர்தார் கோர்ட்" என்று அழைக்கப்பட்டு வந்த மாவட்ட நீதிமன்றங்களின்*

*தீர்ப்புகளைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டார். இந்த மொழிபெயர்ப்புகள் தமிழறிந்த தமிழர்கள் சட்ட அறிவைப் பெறுவதற்கான வாய்ப்பாக அமையும் என்று கருதினார். அந்த வகையில் 1802ஆம் ஆண்டு முதல் 1865ஆம் ஆண்டு வரை வெளிவந்த மாவட்ட நீதிமன்றத் தீர்ப்புகளைத் தொகுத்து அவற்றின் சுருக்கங்களை மொழிபெயர்த்து "சித்தாந்த சங்கிரகம்" என்ற பெயரில் நூலாக வெளியிட்டார். பத்தொன்பதாம் நூற்றாண்டின் உரைநடைத் தமிழ் மொழி நடையில் இந்த நூலின் பெயர் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. சிந்தாந்தம் என்பது தீர்ப்பினையும், சங்கிரகம் என்பது திரட்டு என்பதையும் குறிப்பதாகும். தீர்ப்புத் திரட்டுகளின் தமிழாக்கம் என்பதைச் சித்தாந்தச் சங்கிரகம் என்று குறிப்பிட்டார்.*



*சென்னை உயர்நீதிமன்றம்1981 ஆம் ஆண்டு உயர் நீதிமன்றம் மற்றும் உச்ச நீதிமன்றத் தீர்ப்புகளைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடவேண்டும் என்ற முயற்சியில் ஈடுபட்டது. அதற்கென திங்கள் இதழ் ஒன்றைத் தொடங்கிய போது அந்த இதழுக்கு உயர் நீதிமன்றம் சூட்டிய பெயர் "தீர்ப்புத் திரட்டு" என்பதாகும். இது சிந்தாந்தச் சங்கிரகம் என்பதன் இருபதாம் நூற்றாண்டின் தமிழ் என்பது குறிப்பிடத்தக்கது. எனவே ஆங்கிலத்தில் இருக்கும் சட்டங்களைத் தமிழில் மொழிபெயர்த்துச் சட்டத் தமிழை உருவாக்கிக் கொள்ளும் அரிய பணிக்கு வித்திட்டவர் வேதநாயகம் பிள்ளை அவர்கள். 1861 ஆம் ஆண்டு இந்திய தண்டனைத் தொகுப்புச் சட்டம் இயற்றப்பட்டது.1872 ஆம் ஆண்டு இந்திய சான்றுச் சட்டம் இயற்றப்பட்டது. சட்டங்கள் ஆங்கிலத்தில் இயற்றப்பட்டு வந்த அந்தக் காலக் கட்டத்திலேயே வேதநாயகம் பிள்ளை அவர்கள் நீதி மன்றத் தீர்ப்புகளைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டிருப்பது இவரது முன்னோக்குச் செயல் திறனை எடுத்துக் காட்டுகிறது. எனவே சட்டத் தமிழை*

*உருவாக்கும் முயற்சிகளுக்கும் வேதநாயகம் பிள்ளை அவர்கள் தந்தை என்று அழைப்பதற்கான பெருமைக்குரியவர்.*

**பெண்ணுரிமை முன்னோடி:**

*"பெண்மை வாழ்க என்று கூத்திடுவோமடா" என்று பாடினார் பாரதி.*

*"பெண்களுக்குக் கல்வி வேண்டும்*

*பெண்களுக்குக் கல்வி வேண்டும் " என்று போராடினார் பாவேந்தர்.*

*"பெண்ணின் பெருமை" என்ற பெயரில் நூல் எழுதி பெண்கள் உரிமைக்காகப் பாடுபட்டார் திரு.வி.க. இவர்கள் அனைவரும் இந்தப் பணியை இருபதாம் நூற்றாண்டில் தான் தொடங்கினார்கள்.*



**திரு.வி.க**

*இவர்கள் அனைவருக்கும் காலத்தால் முற்பட்டவரான வேதநாயகம் பிள்ளை அவர்கள் இந்தப் பணியைப் பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே தொடங்கிப் பெண்கள் நலன் குறித்துச் சிந்தித்துள்ளார். இந்த வகையில் இவர்களுக்கு முன்னோடியாகத் திகழ்ந்துள்ளார்.*

*"பெண்மதி மாலை" என்ற பெயரில் நூல் எழுதிப் பெண்களின் பெருமையைப் பேசியதோடு அவர்கள் உரிமைக்காகவும் வாதாடியவர் நீதிநாயகம் வேதநாயகம் அவர்கள். பெண்களுக்கான உரிமைகளுக்கு இவர் பத்தொன்பதாம் நூற்றாண்டிலேயே வழியமைத்துக் கொடுத்தவர் என்பதால் தமிழில் ஆண்பெண் சமத்துவக் கருத்துக்களுக்கு அடித்தளம் இட்டவர் வேதநாயகம் பிள்ளையே ஆவார்.*

***தமிழிசையின் முன்னோடி:***

*வேதநாயகம் பிள்ளை அவர்கள் தஞ்சைத் தமிழர். தமிழிசை அறிஞர்கள் மூவரும் தோன்றிய பகுதிகளில் பயணம் செய்தவர். இயல்பிலேயே வேதநாயகம் பிள்ளை அவர்கள் ஓர் இசைக் குயிலாக வாழ்ந்தவர். ஆனால் அவர் வாழ்ந்த காலத்தில் தமிழகத்து இசை மேடைகளில் தெலுங்கும் வடமொழியும் மட்டுமே வலம் வந்தன. சிலநேரங்களில் கச்சேரியின் நிறைவாக ஒரு தமிழ்ப் பாடல் பாடுவார்கள். அந்தப் பாடல் பெரும்பாலும் ஒரு திருப்புகழ்ப் பாடலாக இருக்கும். அல்லது அவை சைவம் அல்லது வைணவ சமயம் சார்ந்த பாடல்களாக இருந்தன. கச்சேரி கேட்க வரும் அனைவரும் மனதளவில் ஒன்றி நின்று உருகும் பாடல்களாக அவை இருப்பதில்லை. இந்தச் சூழலில் இசைப் புலமையும் சமயப் பொதுநோக்கும் கொண்ட வேதநாயகம் அவர்கள் தமிழிசை தழைக்கத் தமிழில் கீர்த்தனைகள் பாட வேண்டும் என்று கருதினார்.*

*அந்தக் கீர்த்தனைகள் அனைத்துச் சமயத்தாரும் அமர்ந்து கேட்கும் வண்ணம் பொதுமை நெறி உடையதாகவும் இருக்க வேண்டும் என்றும் எண்ணினார். எனவே எந்தச் சமய இறைவன் பெயரையும் குறிப்பிடாமல் "சர்வ சமய சமரசக் கீர்த்தனைகள்" என்னும் பெயரில் தாம் இயற்றிய தமிழிசைப் பாடல்களின் தொகுப்பினை வெளியிட்டார். எனவே 1940களில் தமிழிசை எழுச்சி பெறுவதற்கு முன்னரே தமிழில் கீர்த்தனைகளை இயற்றித் தமிழிசை மீண்டும் புத்துயிர் பெறுவதற்கான பணியில் ஈடுபட்டுள்ள வேதநாயகம் அவர்கள் தமிழிசை முன்னோடியாகவும் விளங்கியவர்.*

*எனவே, பன்முக ஆற்றல் கொண்டவராகத் திகழ்ந்த நீதிநாயகம் வேதநாயகம் பிள்ளை அவர்கள் இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய தமிழறிஞர்களுக்குப் புனைவு இலக்கியம், சட்டத் தமிழ், பெண்ணுரிமை, தமிழிசை சமயப் பொதுமை என்ற துறைகளில் முன்னோடியாகத் திகழ்ந்துள்ளார்.*

*எனவே, தமிழக அரசு இப்போது ஆண்டு தோறும் பாரதி, பாவேந்தர், திரு.வி.க. ஆகிய பெயர்களில் விருதுகளை வழங்கி வருவதைப் போல இவர்களுக்கு முன்னோடியாகத் திகழ்ந்த மாயூரம் முனிசீஃப் வேதநாயகம் பிள்ளை என்று அறியப்படும் நீதிநாயகம் வேதநாயகம் அவர்கள் பெயரிலும் ஒரு விருதினை உருவாக்க வேண்டும். அந்த விருதினைப் தக்க வகையில் அறிஞர் ஒருவருக்கு வழங்கிட வேண்டும். இதுவே வேதநாயகம் பிள்ளை அவர்கள் ஆற்றிய அரும் பெரும் தமிழ்ப் பணிகளுக்குத் தமிழ்ச் சமுதாயம் செய்யும் நன்றிக் கடன் ஆகும். வேதநாயகம் பிள்ளை அவர்களின் நினைவு நாளான இன்று (ஜூலை 21) அவருக்குப் புகழ் வணக்கம் செலுத்துவோம்.*

# "தில்லையம்பதி - வரலாறும், வழக்காறும்"

**முனைவர் சிவ. இளங்கோ,**

*6, கவிஞர் புதுவைச் சிவம் வீதி,*
*வெங்கட்ட நகர், புதுச்சேரி – 605 011.*
*பேசி: 99940 78907.*
*Mail ID: ilangosiva57@gmail.com*



*தில்லையம்பதி என்று பக்தி இலக்கியங்களில் பதியப் பெற்றிருக்கும் சிதம்பரம் நடராசர் கோயில், தமிழ்ச் சமூகத்திற்கு மிகவும் அறிமுகமான ஒன்று. அதன் மூலவரான நடராசர் ஈசனாக, சிவனாக அறியப்படுபவர். அதனால் சைவத் தலம் என்று புகழ் பெற்றது அக்கோயில். அதேநேரம் அக்கோயில் இன்றிருக்கும் அளவிலும், கட்டுமானங்களிலும் 1500 ஆண்டுகளுக்கு முன்பு இருந்திருக்க வாய்ப்பில்லை. ஒவ்வொரு காலத்திலும் அந்தந்தக் காலத்தின் மன்னர்களால் புதிதாகக் கட்டுமானங்கள் செய்யப்பட்டு, விரிவுபடுத்தப்பட்டு, நிலங்கள் எழுதி வைக்கப்பட்டு, ஆபரணங்கள் அளிக்கப்பட்டு இன்றைய நிலைக்கு வந்திருக்கிறது தில்லை நடராசர் கோயில்.*

*மேற்குறிப்பிட்ட உழைப்புக்கும், சொத்துகளுக்கும் எந்தவிதமான உரிமையும் இல்லாத, விண்ணில் இருந்து கடவுளோடு சேர்ந்து பூமிக்கு வந்ததாகக் கூறிக் கொள்ளும் முன் குடுமிச் சோழியர்கள்தான் இன்று தில்லை நடராசர் கோயிலை 'எங்கள் சொத்து' என்று சொந்தம் கொண்டாடி வருகின்றனர். யாருக்கும் எதுவும் சொந்தமில்லை என்பதுதான் சித்தர் தத்துவம். அதுவே பெருமளவிலான மதங்களின் கருத்தும் கூட. ஆனால் தில்லையில் தான் கோயிலையே எங்கள் சொத்து என்று சொந்தம் கொண்டாடும் உஞ்சவிருத்திக் கூட்டமும், அதற்கு இசைந்து கொடுக்கும் சாதி காக்கும் வகையறாக்களும் இருக்கின்றன. சிவன் சொத்து குலநாசம் என்பது ஒன்றுமில்லாத அப்பாவிகளுக்குத் தான். இவர்களுக்கு அல்ல.*

*தமிழர்களின் வழிபாட்டு முறை என்பது நடுகல் வழிபாடாகத்தான் இருந்தது. இறந்து போன முன்னோர்களை நினைத்து வணங்கும் தென்புலத்தார் வழிபாடும், ஊருக்காக, நாட்டுக்காகத் தன்னைத் தியாகம் செய்து கொண்ட வீரர்களின் பெயரும், உருவமும் பொறித்த நடுகற்களுக்கு ஊரார் செய்யும் வழிபாடுகளும்தான் சங்கத்தமிழ் நூல்களில் குறிப்பிடப்படுகின்றன. இவை*

கற்காலம் தொடங்கி நடந்து வருபவை. கற்காலத்தில் விலங்குகளை வேட்டையாடக் கல் ஆயுதங்கள் பயன்படுத்தப்பட்டன. கற்கள் இருபக்கமும் மழுங்கலாகவும், ஒருபக்கம் கூராகவும் தீட்டப்பட்டு, வேல் என்ற ஆயுதத்தின் தலைப்பகுதி போலக் கைகளால் பாறைகளில் தேய்த்து வடிக்கப்பட்டன. அவற்றை ஒரு மரக்கிளையில் அல்லது கோலில் கட்டினால் அதுவே வேலாயுதம். இந்த வேலைக் கைக்கொண்டு, வேட்டை நடத்தி, மிருகங்களைக் கொன்று, கொண்டு வருபவனே வேலன். வேட்டை நடந்து முடிந்த பின்னர் நடைபெறுவது வேலன் வெறியாட்டம். இதில் ஊரார் அனைவரும் கள் அருந்தி, வேட்டை உணவை உட்கொண்டு முன்னோர்களுக்கும், வேலனுக்கும் வழிபாடு செய்வர். இனக்குழு காலத்தில் இருந்து இப்படித் தொடங்கி இன்றும் தொடர்வது தான் குலதெய்வ வழிபாடு. இதற்கு நடுகற்களும், நினைவுச் சின்னங்களும் தவிர வேறு கோயில்கள், மண்டபங்கள் ஏதுமில்லை.

பல்லவர் காலமான கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிற்குப் பிறகுதான் கோயில்கள் உருவாக்கம் பெற்றன. பல்லவர் காலத்தில் துவக்கம் பெற்ற கோயில் கலை, சோழர்கள் காலத்தில் உச்சம் பெற்றது. பாண்டியர்கள் கோபுரங்கள் அமைந்த கோயில்களைக் கட்டினர். இவற்றிற்குக் கோயில், கோவில், ஆலயம், தேவஸ்தானம், அம்பலம், தளி என்று இடத்திற்குத் தகுந்த பெயர்கள் சூட்டப்படுகின்றன. ஐந்தாம் நூற்றாண்டிற்கு முன்பு சமணப் பள்ளிகளும், பௌத்த மடம் அல்லது விகாரங்கள் இருந்தன. அங்கும் உருவ வழிபாட்டு முறைகள் இல்லை. மகாவீரர், புத்தர் ஆகியோரின் பாத உருவங்களைக் கல்லில் வடித்து அவற்றின் மீது மலர்களை நிறைப்பதும் தான் அவர்கள் நினைவைப் போற்றும் சடங்காக இருந்தது. இதைத்தான் நற்றாள், தாள், மாணடி என்பார் திருவள்ளுவர். அவர்களின் உருவச் சிலைகளை வழிபாட்டு வந்ததாகத் தகவல்கள் இல்லை.

சமண, பௌத்த, ஆசீவக சமயங்கள் மக்களின் ஆதரவைப் பெற்றிருந்த காலத்தில், மன்னர்களின் ஆதரவுடன் அவை கல்வி, மருத்துவம், பொதுச் சேவை என்று தங்களை நிலைப்படுத்திக் கொண்டன. அதற்காக சமணப் பள்ளிகளுக்கும், பௌத்த, ஆசீவக மடங்களுக்கும் இடம் ஒதுக்கி, மண்டபம் கட்டித் தருவதும், துறவிகளுக்குக் கற்படுகைகள் அமைத்துத் தருவதும் ஒவ்வொரு வணிகர்கள், மன்னர்களின் கடமையாக இருந்தது. இப்படி உருவானவை கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு வரையில் எந்தவொரு இடையூறுமின்றி நடந்து வந்தன.

பல்லவர் காலத்தின் தொடக்கத்தில் சமண, பௌத்த, ஆசீவகச் சமயங்களுக்கு அரசு ஆதரவு இருந்தது. மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாகக் கைபர், போலன்

கணவாய் வழியாக உள்நுழைந்த ஆரிய நாடோடிக் கூட்டம், சிந்துவெளியைத் தின்று செரித்து, வடநாட்டு அரசுகளை வஞ்சத்தால் கையகப்படுத்தி, அதில் சில பிரிவுகள் வேறு இடம் தேடிக் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டு வாக்கில் தட்சிணப் பிரதேசம் என்று வழங்கிய தென்னகத்தில் உள் நுழைந்தன. வடநாட்டுச் சாம்ராஜ்யங்களையே அழித்த அனுபவத்தில் தென்னகத்து மன்னர்களை வஞ்சித்து, வளைத்தெடுக்க அவர்கள் பெரும் சிரமப்படவில்லை.

பல வகைகளிலும் மயக்கப்பட்ட மன்னர்கள், வைதிக நெறிகளை ஏற்கவும், மக்களுக்குச் சேவை புரிந்து வந்த சமண, பௌத்த, ஆசீவக சமயங்கள் அரசு ஆதரவையும், அதனால் செல்வாக்கையும் இழந்தன. நாட்டில் ஆங்காங்கிருந்த சமணப் பள்ளிகளும், பௌத்த, ஆசீவக மடங்களும் வைதீக மடங்களாக மாறிப் போயின. வைதிகத்தை ஏற்ற மன்னர்கள் இம்மடங்களுக்கு இடமும், பொருளும் கொடுத்துக் கட்டுமானங்களையும் செய்து தந்தனர்.

வைதீகத்தின் வழி பல கடவுள்கள் கற்பிக்கப்பட்டன. தென்னகத்தின் அனைத்து சமண, பௌத்த, ஆசீவக மடங்களும் வைதிகக் கோவில்களாக மாற்றம் பெற்றன. அதற்குப் பிறகு உருவாக்கம் பெற்றவை அனைத்துமே தமிழர்கள் வாழ்வில் காணாத வைதிகக் கடவுள்களும், கோயில்களும் தான். அப்படி ஒரு கோயில் தான் தில்லை நடராசர் கோயிலும்.

சிதம்பரம் என்று தற்போது வழங்கும் இப்பழமையான ஊர், 'தில்லை' மரங்கள் அடர்ந்த காடாக இருந்தபடியால் தில்லைக் காடு, தில்லைவனம் என்று அழைக்கப்பட்டு வந்தது. தில்லை என்று சுருக்கமாகவும் இவ்வூர் குறிக்கப்படுகிறது. தற்போது பிச்சாவரம் உப்பங்கழிக் கரைகளில் மட்டும் சில தில்லை மரங்கள் உள்ளன. சிவபெருமானை 'ஆடல் வல்லான்' எனக் கருதி நடன அரசர் என்னும் பொருளில் நடராசர் கோயில் எனப்படுகிறது. இன்னும் அம்பலக் கூத்தன், கூத்தபிரான், அம்பலவாணன், திருச்சிற்றம்பலம், கனகசபை என்றும் ஏராளமான பெயர்கள் தில்லை நடராசர்க்கு உண்டு.

சிற்றம்பலம் என்பது சித் + அம்பலம் ஆகிய சொற்களின் கூட்டு. 'சித்' என்பதற்குக் கடவுளின் இருப்பை உண்மை நிலையாக ஏற்றுக் கொள்வது என்று பொருள். சத் என்பதற்குப் பிரம்மம் (இருப்பது) என்று பொருள். சித் என்னும் உண்மையை, அம்பலத்தில் ஆடிச் சொல்வதால் அம்பலம், சிற்றம்பலமாகிச் 'சிதம்பரம்' என்றானது. இந்தப் பொருள்களின் அடிப்படையில் கூட்டாக உருவான சொற்றொடர் தான் சத் + சித் + ஆனந்தம்; அதாவது 'சச்சிதானந்தம்' என்று சொல்வதன் அடிப்படை.

இந்தத் தில்லை அம்பலக் கோயிலை ஐம்பூதங்களில் ஒன்றான ஆகாயத் தலமாகக் குறிப்பிடுகின்றனர். அந்த ஆகாயமே அம்பலம், வெளி எனப்படுகிறது. ஐம்பூதங்களில் மற்ற பூதங்களில் ஒன்றான நிலத்திற்குக் காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயிலைத் தலமாகவும், நெருப்புக்குத் திருவண்ணாமலைக் கோவிலைத் தலமாகவும், நீருக்கு திருவானைக்கா ஜம்புகேஸ்வரர் கோயிலைத் தலமாகவும், காற்றுக்குத் திருக்காளத்தி காளத்தீஸ்வரர் கோயிலைத் தலமாகவும் கூறி வருகின்றனர்.



இந்த ஐம்பூதக் கோட்பாடுகள் எல்லாம் வைதிகம் உள்நுழைவதற்கு முன்பிருந்த இந்தியாவின் பழமையான சமயங்கள் போதித்தவை. அவை கடவுள், ஆன்மா குறித்துக் கற்பிக்க வில்லை. அவற்றில் இருந்து வைதீகம் பெற்றவை தான் இந்தக் கோட்பாடுகள். திருடியவை என்று கூடச் சொல்லலாம். அதாவது புத்தருக்கும் முன்பிருந்த சார்வாகம் (உலகாயதம்), சாங்கியம் (எண்ணியம்) ஆகிய பழைய சமயங்களின் கோட்பாடுகளில் இருந்து எடுக்கப்பட்டவை. நிலம், நீர், வளி, நெருப்பு, ஆகாயம் என்ற ஐம்பூதங்களின் சேர்க்கையில் தான் இந்த அண்டம் உருவான கோட்பாட்டை அவை முன் வைத்தன. இதில் உலகாயுதம், ஆகாயம் தவிர்த்து நான்கு பூதக் கோட்பாட்டைச் சொன்னது.

தானாகவே மாறிக்கொள்ளும் (இரத்தினக் கற்கள் போன்றவை) பௌதிகச் சேர்க்கையும், பலவகை உலோகங்களை உருக்கிச் சேர்த்து மாற்றும் வேதியல் சேர்க்கையும், தோற்றுவன் இல்லாமலேயே தோன்றக்கூடியவை என்றே பழைய சமயங்கள் கற்பித்தன. எனவே இல்லாத ஓர் அதிகாரத்திற்கு அல்லது கற்பிக்கப்பட்ட படைப்பின் தலைமைக்கு நாம் ஆட்பட வேண்டிய அவசியம்

*இல்லை என்றும், எந்த ஒரு கட்டுப்பாடும் இன்றி வாழ்க்கையை இன்பமாய் வாழலாம் என்றும், இன்பவியல் கோட்பாட்டைக் கொண்டவை தான் இந்தியாவின் ஆதிச் சமயங்கள். அதனால் பொருளுக்கு (உலகத்திற்கு) அடிப்படையான ஐம்பூதக் கோட்பாடுகளைக் குறிப்பதற்காகவே, அவற்றை நினைவுபடுத்தும் தலங்களாக ஆதியில் சமணப் பள்ளிகள், பௌத்த, ஆசீவக மடங்கள், பிற சமய மடங்கள் அமைந்திருந்தன.*

*கி. பி. இரண்டாம் நூற்றாண்டு தொடங்கிக் கி. பி. ஐந்தாம்/ஆறாம் நூற்றாண்டு வரையில் தமிழகத்தில் களப்பிரர் ஆட்சி இருந்தது. அதைப்பற்றிப் பேச நேர்ந்தாலே வைதிகர்களுக்கு இப்போதும் குடல் நடுங்கும். அது ஏதோ கொடுங்கோன்மை ஆட்சி என்று இன்றுவரை கதைத்துக் கொண்டிருக்கின்றனர். ஆனால் அண்மைக்கால ஆய்வுகள், களப்பிரர் ஆட்சி என்று சொல்லப்படும் காலத்தில் சமண, பௌத்த, ஆசீவகச் சமயங்கள் ஆட்சி அதிகாரத்தோடு நெருங்கி இருந்தன என்று தெரிவிக்கின்றன. மேலும் இக்காலகட்டத்தில் தான் தமிழ் இலக்கிய, இலக்கண நூல்கள் பெருமளவில் இயற்றப்பட்டுள்ளன. தமிழில் சமண, பௌத்தக் காப்பியங்களே தொண்ணூறு விழுக்காடு என்ற அளவில் இருக்கின்றன. இது குறித்து ஆய்வாளர்கள் மயிலை சீனி வேங்கடசாமி, தெ. பொ. மீனாட்சி சுந்தரம் ஆகியோர் தங்கள் ஆய்வுகளில் குறிப்பிட்டுள்ளனர். களப்பிரர் ஆட்சியின் இறுதிக் காலத்தின் போது தான் பல்லவர்கள் ஆட்சி தமிழகத்தில் ஏற்பட்டது. பல்லவர் ஆட்சியின் தொடக்கக் காலங்களில் சமண, பௌத்த, ஆசீவக சமயங்கள் மதிக்கப்பட்டன. கி. பி. 400 - 700 என்ற காலப்பகுதியைப் பௌத்தத்தின் பொற்காலமாக ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர்.*

*இக்கால கட்டத்தில் தமிழகத்தின் காஞ்சி, காவிரிப் பூம்பட்டினம், உறந்தை, மதுரை, வஞ்சி ஆகிய தலைநகரங்களிலும், சிற்றூர்களிலும் பௌத்தம் பரவி இருந்தது. மதுரைப் பகுதிகளில் சமண, பௌத்தத் துறவிகளுக்குக் கற்படுகை போன்ற வசதிகள் வணிகர்களாலும், மன்னர்களாலும் ஏற்படுத்தித் தந்ததைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. சங்க இலக்கியங்களில் இளம்போதியார், சிறுவெண்தேரையர், தேரதரர் முதலிய பௌத்த நெறி சார்ந்த புலவர்கள் பாடி உள்ளனர். திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்கள் சமண, பௌத்த நெறிகளையும், கருத்துகளையும் கொண்டுள்ளன. இக்காலத்தில் வடக்கில் இருந்து பல்வேறு காரணங்களுக்காகத் தெற்கு நோக்கி வந்த வைதீகக் கூட்டம் வழக்கம்போல் சமய அதிகாரத்தைக் கைப்பற்றப் பெரிதும் போராடியது. அறம் கூறி மக்களுக்குச் சேவை செய்து வந்த சமண, பௌத்த, ஆசீவகத் துறவிகள் சமுதாயத்தில் அறவோர்களாகவும், அந்தணர்களாகவும் மதிக்கப்பட்டு வந்தனர். அந்நிலையைத் தாங்கள் அடையும்*

*பேராசையில் சமண, பௌத்தத் துறவிகளை வம்புக்கு இழுத்து, வாதத்தில் வென்றதாகக் கூறி சமண, பௌத்தத் துறவிகளை கழுவேற்றுவதும், பல்வேறு சித்திரவதைகளை நடத்துவதுமாகச் சைவமும், வைணவமும் வெறியாட்டம் ஆடித் தீர்த்தன.*

*இப்படிப்பட்ட கொடுமைகள் மதுரை, காஞ்சி, சிதம்பரம் பகுதிகளில் அதிகமாக நடந்தேறின. திருஞானசம்பந்தரும், திருமங்கை மன்னனும் பௌத்தத்தை வேரறுக்கத் துணிந்து செயல்பட்டனர். சம்பந்தர், தான் பாடிய ஒவ்வொரு பதிகத்திலும் (பதிகம் என்பது பத்து பாடல்கள் கொண்டது) பத்தாவது பாடலைச் சமண, பௌத்தர்களைக் கடுமையாகக் குறை சொல்வதற்காகவே பயன்படுத்தி இருக்கிறார்.*



*போதிமங்கையில், சாரி புத்தரின் தலைமையில் திரண்ட பௌத்த அறிஞர்களைச் சம்பந்தர் வாதில் வென்றதாகப் 'பெரிய புராணம்' குறிப்பிடுகின்றது. ஐம்பொன் புத்தர் சிலையினை மங்கைமன்னன் களவாடிச் சென்று திருவரங்கத்தில் அழகிய மணவாளனின் திருக்கோயில் பணிக்குச் செலவிட்டதாகக் 'குரு பரம்பரை நூல்கள்' கூறுகின்றன. இதே காலகட்டத்தில் மாணிக்கவாசகர் தில்லையில், பௌத்த அறிஞர்களைச் சொற்போரில் வென்று சைவர்களாக மாற்றிய நிகழ்ச்சி நடந்ததாகப் பாடி வைக்கப் பட்டுள்ளது.*

*இப்படி உயிர்க் கொலைகளைத் துணிந்து செய்த சைவக் குரவர்களும், வைணவ ஆழ்வார்களும் சமண, பௌத்த, ஆசீவக சமயங்களை மிகக் கடுமையாக விவரித்தும், அச்சமயக் கொள்கைகளைத் திரித்துக் கூறியும், நாகரிகமற்ற வகையில் இழிவான எண்ணங்களாலும், பாலியல் வசவுகளாலும் பாடி வைத்தனர்.*

இலங்கையில் இருந்து வந்த பௌத்தத் துறவிகளைத் தில்லையில் வைத்து மாணிக்கவாசகரும், பரஞ்சோதி முனிவரும் வாதம் புரிந்து, அவர்கள் அனைவரையும் ஊமைகளாக்கிய கதையை, "புத்தரை வாதில் வென்ற சருக்கம்" என்ற தலைப்பில் 'திருவாதவூரடிகள் புராண'த்தில் குறிப்பிடப்பட்டு இருக்கிறது. பௌத்தர்கள் அனைவரும் சைவர்களாக மாறித் தில்லைப் பெருமானின் திருவருளைப் பெற்றனர் என்றும் அப்புராணம் குறிப்பிடுகின்றது. தில்லையைச் சுற்றிலும் ஏராளமான புத்தர் சிலைகளும், பௌத்தச் சின்னங்களும் இருந்ததைப் பல்வேறு ஆய்வு நூல்கள் குறிப்பிடுகின்றன (டாக்டர் சோ. ந. கந்தசாமி, இந்தியத் தத்துவக் களஞ்சியம், தொகுதி ஒன்று, பக்கம் 342 - 353).

முற்கூறிய செய்திகள், தில்லையில் 1500 ஆண்டுகளுக்கு முன்பு பௌத்த மடம், விகாரைகள் அதிகமாக இருந்திருக்க வேண்டும் என்பதைத்தான் மெய்ப்பிக்கின்றன. தில்லையில் முன்பிருந்த பௌத்த மடம்தான் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டுக்குப் பிறகு பல்லவர்கள், பிற்காலச் சோழர்கள், பிற்காலப் பாண்டியர்கள் அரசாண்ட காலத்தில் வைதீகக் கோவிலாக மாற்றப்பட்டு, ஒவ்வொரு மன்னர்களாலும் விரிவு படுத்தப்பட்டு, இன்று பெரிய பரப்பளவும், மண்டபங்களும் நிறைந்த சிதம்பரம் நடராஜர் கோயிலாகக் காட்சி தருகின்றது.

இத்தனை வரலாற்றுத் தரவுகள் நிறைந்த இந்த கோயிலைத்தான் தங்களுக்கு உரியது என்றும், கோயில் நிர்வாகத்தில் அரசு தலையிடல் ஆகாது என்றும் தில்லைத் தீட்சிதர்கள் தில்லி நீதிமன்றம் வரை சென்று வாதாடினர். இதற்கு மேலும் சென்று, இந்தத் தீட்சிதர்கள், தங்களைக் கடவுளுக்கு ஒப்பானவர்களாகச் சிவபெருமானே வந்து சாட்சி சொல்லியதாகவும் கதைக்கின்றனர்.

புத்தர் கோயிலை மாற்றி அமைத்துச் சோழ மன்னர்கள் கட்டிய கோயிலை, மனுச்சக்கரவர்த்தி மரபில் வந்த இரண்யவர்மன் கட்டியதாகவும், அதற்காக, கங்கைக் கரையில் உள்ள அந்தர்வேதியில் இருந்து மூவாயிரம் அந்தணர்களைத் தில்லைக்கு அழைத்து வந்ததாகவும், அவர்களே தில்லை மூவாயிரவர் என்றும் தில்லை தீட்சிதர்களில் ஒருவரான உமாபதி சிவாச்சாரியார் என்பவர் பதினான்காம் நூற்றாண்டிலேயே 'கோயில் புராணம்' ஒன்றை எழுதி வைத்துவிட்டார்.

அதை மட்டுமே தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்துகின்ற தில்லைத் தீட்சிதர்கள், அதற்கு முன்பாக இருந்த பௌத்த வரலாறுகளைச் சிறிதும் கவனத்தில் எடுத்துக் கொள்வதில்லை.

இதனால் கோயில் நிர்வாகத்தில் மற்றவர்கள் தலையீட்டை மறுக்கும் தீட்சிதர்கள், இரண்யவன்மனுக்குச் சோழ மன்னராக ஆத்திமாலை சூட்டி, புலிக்கொடி கொடுத்து முடி சூட்டி, சோழர் குல அரசியைத் திருமணம் செய்து வைத்ததாகவும் தங்கள் புராணத்திலேயே கூறியுள்ளனர். இதன்படி, சோழ மன்னர்கள் கட்டுப்பாட்டில் இருந்து வந்த சிதம்பரம் நடராஜர் கோயில், பிற்காலத்தில் சோழப் பரம்பரை இல்லாது போகவே, படிப்படியாகத் தீட்சிதர்களின் கட்டுப்பாட்டிற்கு வந்து விட்டதாகத் தீட்சிதர்களே கூறுகிறார்கள்.



சோழ மன்னர்கள் கட்டுப்பாட்டில் இருந்து வந்த சிதம்பரம் நடராஜர் கோயில், பிற்காலத்தில் சோழப் பரம்பரை இல்லாது போகவே, படிப்படியாகத் தீட்சிதர்களின் கட்டுப்பாட்டிற்கு வந்து விட்டதாகத் தீட்சிதர்களே கூறுகிறார்கள்.

இவர்கள் கூறுவதில் அடிப்படையில் உண்மைக்கு மாறுபட்ட இரண்டு செய்திகள் உள்ளன. ஒன்று, சிதம்பரம் நடராசர் கோவிலைக் கட்டியது தமிழன் அல்லாத ஒரு மன்னன் என்பது. மற்றொன்று சோழர் பரம்பரை தற்போது இல்லை என்பது. தில்லை நடராசர் ஆலயம் சோழ மன்னர்களால் உருவாக்கப்பட்டதற்கும், தில்லை நடராசனையே தங்கள் குலதெய்வமாகச் சோழ மன்னர்கள் கொண்டிருந்தனர் என்பதற்கும், சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணமும், சிதம்பர புராணமும், பெரிய புராணத்தில் உள்ள கூற்றுவநாயனார் வரலாறும், பல்வேறு கல்வெட்டுகளும், தஞ்சைப் பெரிய கோவில் ஓவியங்களும் சான்றுகளாக விளங்குகின்றன. சோழ மன்னருக்கு ஆத்திமாலை சூட்டிப், புலிக்கொடி கொடுத்து, முடிசூட்டும் நிகழ்வு ஓவியமாகச் சிதம்பரம் கோயில் மேற்கூரையிலேயே வரையப் பட்டிருக்கிறது.

இரண்டாவதாகத் தற்போதுள்ள பிச்சாவரம் பாளையக்காரர்கள் தான் சோழ பரம்பரையினர் என்பது, தில்லைத் தீட்சிதர்களே பிச்சாவரம்

பாளையக்காரர்களுக்கு சோழ மன்னர்களாக முடி சூட்டியதில் இருந்து தெரிய வருகிறது. கங்கைகொண்ட சோழபுரத்தைத் தலைமை இடமாகக் கொண்டு ஆண்டு வந்த சோழ வம்சம், பதின்மூன்றாம் நூற்றாண்டில் நலிவுற்றது. இதனால் தங்கள் இருப்பிடத்தைச் சோழர்கள் தீவுக்கோட்டைக்கு மாற்றிக் கொண்டனர். பின்னர் ஏற்பட்ட நாயக்க மன்னர்களின் ஆட்சியின் போது, 17 ஆம் நூற்றாண்டில், தஞ்சையை ஆண்டு வந்த ரகுநாத நாயக்கர், தீவுக்கோட்டையைக் கைப்பற்றியதால், சோழர்கள் அங்கிருந்து பிச்சாவரத்திற்குக் (பித்தர் புரம்) குடிபெயர்ந்து, சிறிய அளவில் அரண்மனை ஏற்படுத்திக் கொண்டு பாளையக்காரர்களாக மாறிப் போயினர். ஆனாலும், தில்லை நடராஜர் ஆலயத்தில் சோழ மன்னர்கள் முடி சூட்டிக் கொள்ளும் பஞ்சாட்சரப்படியில் பிச்சாவரம் பாளையக்காரர்களை அமர வைத்து முடி சூட்டும் வைபவம் இக்காலம் வரை பாரம்பரியமாக நடந்தேறி வருகிறது. இறுதியாக 16. 6. 1978 அன்று தில்லை நடராசர் கோயிலில் சோழ வம்சத்தின் முடிசூட்டு விழா நடந்திருக்கிறது.

"சிதம்பரம் ஸ்ரீ நடராஜப் பெருமான் சன்னிதியிலே தில்லை மூவாயிர முனிவர்கள் திருமுன்னே ஸ்ரீ பஞ்சாக்ஷரப்படியின் மீதே சோழ வம்சத்தினருக்குத் தொன்றுதொட்டு பட்டாபிஷேகம் நடந்து வந்த சம்பிரதாயப்படி அச்சோழ வம்சாவழி வந்த மன்னர் பரம்பரை உயர்திரு ஆண்டியப்ப சூரப்ப சோழனார் அவர்களின் ஜேஷ்ட குமாரர் திரு சிதம்பரநாத சூரப்ப சோழனார் பி. ஏ. வுக்கு மணிமுடி சூட்டுவிழா" நடைபெற்றதாக இதற்கான அழைப்பிதழ் தெரிவிக்கிறது.

மேலும், சிதம்பரம் கோவிலின் நடை சாத்தப்படும் போது, நுழைவாயில் கதவுச் சாவி, பிச்சாவரம் ஜமீன் அரண்மனைக்கு அன்றாடம் இரவில் பல்லக்கில் கொண்டுவரப்பட்டு, மறுநாள் அதிகாலை, திரும்பவும் அரண்மனையில் இருந்து கொண்டு செல்லப்பட்டுள்ளது என்ற செய்தியும் தெரிய வருகிறது. அண்மைக்காலம் வரை வழக்கத்தில் இருந்த இம்முறை 1980 ஆம் ஆண்டுகளில் பிச்சாவரம் அரண்மனை இடிபாடுற்றக் காலத்திற்குப் பிறகு தீட்சிதர்களால் உள்நோக்குடன் மாற்றப்பட்டு விட்டிருக்கிறது. (க.சி.து. நாராயணசாமி எழுதிய "இரண்யவர்மன் சோழ மன்னரான வரலாறு" நூல்).

இப்படித் தமிழ் மக்களுக்குச் சொந்தமான கோயிலைக், குறிப்பாகத் தமிழ் பௌத்தர்கள் உருவாக்கிய கோயிலை, யாரும் கவனிப்பாரின்றிப் போனபடியால், எங்கோ வடக்கில் இருந்து வந்த ஆரிய நாடோடிகள் தங்கள் உடைமையாகக் கைக்கொண்டு விட்டனர். இப்படி உரிமையின்றிப் பெறப்பட்ட கோயிலைத் தங்கள் சமூகத்திற்கே உரிமையானது என்றும்,

*இறைவனோடு பூலோகத்திற்கு வந்த அந்தணர்கள் தாங்கள் என்றும் கூறி, தங்கள் ஏகபோக ராஜ்யத்தை அமைத்துக் கொண்டுள்ளனர் இந்தத் தில்லைத் தீட்சிதர்கள்.*

*கோயிலுக்குச் சொந்தமான 900 ஏக்கருக்கும் மேற்பட்ட நிலத்தைப் பாதி அளவிற்கு மட்டுமே குத்தகைக்கு விட்டு, முழு வருமானத்தையும் மறைத்து வருகின்றனர். கோவிலுக்கு வரும் பக்தர்களை விரட்டிப் பணம் வசூல் செய்வது, சிற்றம்பல மேடையில் ஏறி சாமி தரிசனம் செய்யப் பணம் பிடுங்குவது, பக்தர்களைக் கண்டபடித் திட்டுவது, தாக்குவது, சாதிப் பெயர்களைச் சொல்லி அவமரியாதையாகப் பேசுவது போன்ற செயல்களில் தீவிரமாகத் தினமும் ஈடுபட்டு வருகின்றனர் இந்தத் தீட்சிதர்கள்.*

*இவர்களில் இளைய சமுதாயத்தினரோ கோயிலுக்குள்ளேயே மது, மாமிசம், பாலியல் பிரச்சனைகளில் ஈடுபடுவதாகப் பொதுமக்களே கூறிய புகார்களை அடுத்தும், தில்லைத் தீட்சிதர்களின் கொலை, கொள்ளை, களவு, சூது, வாது, மது ஆகிய நிகழ்வுகள், பிரபலமான செய்தி ஊடகங்களில் தொடர் கட்டுரைகளாக வெளிவந்ததை அடுத்தும், மனித உரிமைகள் அமைப்புகளும், சமுதாய அமைப்புகளும், அரசியல் கட்சிகளும் கோயில் நிர்வாகத்தை அரசே ஏற்க வற்புறுத்தி வந்தனர். இதனை ஏற்று 1987 ஆம் ஆண்டில் கோயில் நிர்வாகத்தைத் தமிழக அரசின் இந்து அறநிலையத்துறை ஏற்கத் தமிழ்நாடு அரசாங்கம் உத்தரவிட்டதைத் தொடர்ந்து தீட்சிதர்கள் நீதிமன்றத்தில் இதற்குத் தடை உத்தரவு பெற்றனர்.*

*தில்லைத் தீட்சிதர்களின் எல்லை மீறிய அக்கிரமங்களின் ஒரு பகுதியாகத் தமிழ் மக்களுக்காக உருவாக்கப்பட்ட கோயிலில் தமிழில் பாட முடியாதவாறு தடை உத்தரவும் பெற்றிருக்கின்றனர். தேவாரப் பாடல்கள் முழுவதும் ஓலைச்சுவடியில் இருந்த காலத்தில் அதைப் பாதுகாக்க சோழ மன்னர் முதலாம் குலோத்துங்கன் செய்த ஏற்பாட்டின் படி, அவரது அமைச்சர் காலிங்கராயன் அத்தேவாரப் பாடல்களைச் செப்பேடுகளில் பொறித்துத் தில்லைச் சிற்றம்பலத்தில் வைத்துப் பாதுகாத்தார் என வரலாற்றுச் செய்திகள் தெரியப்படுத்துகின்றன.*

*இந்தத் தமிழ்ப் பாடல்களைத் தான் தில்லைச் சிற்றம்பல மேடையில் பாடக்கூடாது என்று தீட்சிதர்கள் தடை உத்தரவு பெற்று இருக்கின்றனர். திருச்சிற்றம்பல மேடையில் தேவாரம் பாடக் கூடாது என்ற தீட்சிதர்களின் எதிர்ப்புக்கு இதுவரை எந்த ஆதீனமும் எதிர்ப்புத் தெரிவித்ததில்லை.*

*சிதம்பரம் கோயில் தொடர்பான வழக்குகள் பிரிட்டிஷ்காரர்கள் ஆட்சிக் காலத்திலிருந்தே நீதிமன்றங்களைச் சந்தித்து இருக்கின்றன. 1880 - 1890 வரை சில வழக்குகளும், பின்னர் 1890, 1939, 1952, 2007, 1997 ஆகிய ஆண்டுகளில் உயர் நீதிமன்ற வழக்குகளாகவும் நடைபெற்றன. பின்னர் தமிழ்நாடு அரசாங்கம் இந்து அறநிலையத்துறைக்குச் சிதம்பரம் கோயில் நிர்வாகத்தை மாற்றியதைத் தொடர்ந்து தீட்சிதர்கள் தொடுத்த வழக்கில், 2014 ஆம் ஆண்டில் உச்ச நீதிமன்றத்தில் தீர்ப்புச் சொல்லப்பட்டு நிர்வாகம் தில்லைத் தீட்சிதர்கள் கைக்கு மாறியது. ஆனால் இதற்கு முன் கூறிய அனைத்துத் தீர்ப்புகளிலும் தில்லை நடராசர் கோயிலைப் பொதுக் கோயில் என்று தான் உயர் நீதிமன்றங்களும், உச்ச நீதிமன்றங்களும் கூறி இருக்கின்றன. அது தீட்சிதர்களுக்குச் சொந்தமானது என்று இதுவரை வெளிவந்த எந்த நீதிமன்றத் தீர்ப்பிலும் சொல்லப்படவில்லை. 17. 3. 1890 இல் தீட்சிதர்கள் தொடர்ந்த வழக்கில் முத்துசாமி ஐயர் உயர்நீதிமன்ற நீதிபதியாக இருந்து அளித்த தீர்ப்பிலும் தில்லை நடராசர் கோயில் பொதுக் கோயில் என்றுதான் கூறப் பட்டிருக்கிறது.*

*1888 ஆம் ஆண்டில் தில்லைக் கோயில் நிர்வாகத்திற்காக அறுவர் குழு ஒன்று நியமிக்கப்பட்டது. அதன் தலைவர் முத்துசாமி ஐயர். அதில் பாஷ்யம் ஐயங்கார் போன்றவர்களும் இருந்தனர். இந்த ஐயர்களும், ஐயங்கார்களும் அடங்கிய குழுதான் நடராசர் கோயில் நிர்வாகத்தை அரசு ஏற்க வேண்டும் போன்ற தீர்மானங்களை நிறைவேற்றி இருக்கின்றனர். இதை அன்று பார்ப்பன ஊடகங்களும் கூட ஆதரித்து எழுதின. "நிர்வாகத்தை அரசாங்கம் ஏற்பது தங்களைப் பாதிக்கும் என்று தீட்சிதர்கள் சொல்வதானது, குற்றவியல் சட்டம் கொண்டு வந்தால் அது எங்களைப் பாதிக்கும் எனத் திருடர்கள் சொல்வதைப் போன்றது" என்று அப்பொழுது பார்ப்பன ஏடுகளிலேயே எழுதப்பட்ட வரலாறும் உண்டு.*

*இந்த முன்குடுமிச் சோழியர்களைப் பற்றிப் பதினெட்டாம் நூற்றாண்டிலேயே காளமேகப் புலவர் என்னும் வைணவப் பார்ப்பனர் பாடி வைத்து விட்டார்.*

> *"சுருக்கவிழ்ந்த முன்குடுமிச் சோழியா! சோற்றுப்*
> *பருக்குலர்ந்த வாயா! புலையா! - திருக்குடந்தைக்*
> *கோட்டானே! நாயே! குரங்கே! உனையொருத்திப்*
> *போட்டாளே வேலையற்றுப் போய்!"*

*(தனிப்பாடற்றிரட்டு - கவி காளமேகம் பாடல்கள்) என்ற அவரது தனிப்பாடல் மூலம் இதனை அறியலாம்.*



*இதன் பின்னர் 1920 ஆம் ஆண்டில் நீதிக்கட்சி ஆட்சியின்போது, சென்னை மாகாணச் சட்டமன்றத்தில் "இந்து அறநிலையத் துறையை உருவாக்கும் மசோதா" 1924 ஆம் ஆண்டு கொண்டு வரப்பட்டு, 1925 ஆம் ஆண்டு சனவரி மாதத்தில் சட்டமாக்கப் பட்டது. அன்றைய நீதிக் கட்சியினர் பெரும்பாலோர் இறை நம்பிக்கை கொண்டவர்களே என்பதும் குறிப்பிடத்தக்கது.*

*இந்தியச் சமூகம் சாதிகளாலும், மதங்களாலும் பின்னிப் பிணையப்பட்டிருக்கிறது. இதற்கு வேதமும், வைதீகமும் அடிப்படைக் காரணங்களாக அமைந்திருக்கின்றன. அதை அப்படியே ஏற்றுக் கொண்டுவிட்ட இந்திய மக்கள் அதைப் போற்றிப் பாதுகாத்து வருகின்றனர்.*

*இன்றைக்குப் பார்ப்பனர்களே வேண்டாம் என்றாலும் கூட, அதற்கு அடுத்தடுத்த நிலையில் உள்ள சாதிக்காரர்கள் அதை விடுவதாக இல்லை. இப்படிப்பட்ட சூழ்நிலைகள் தான் பார்ப்பனர்களை இன்னும் அதிகாரத்தைத் தக்க வைத்துக் கொண்டிருக்கிறவர்களாக ஆக்கி வைத்திருக்கின்றன. அதனால்தான் இந்தக் காலத்திலும் கூட மனிதனை மனிதனாக மதிக்காத 'மனுதர்மம்' தேவை என்றும், கோயில்களில் 'உயர்சாதி ஆதிக்கம்' தேவை என்றும் அவர்களால் வெட்கமின்றிச் சொல்ல முடிகிறது.*

*அது மட்டுமல்லாமல் அடுத்தடுத்த சாதிகளை மிகக் கேவலமாகப் பேசுவதும், கோயில் உள்ளே வரவிடாமல் தடுப்பதும் இன்னும் நந்தனார் காலத்து நடைமுறைகள் தான் கோவில்களில் நீடித்து வருகின்றன என்ற உண்மையை அப்பட்டமாகத் தெரிவிக்கின்றன.*

*'காலந்தோறும் நந்தன்' என்பது கனவாக மாறுகின்ற காலத்தில் தான் சாதி, பேத வித்தியாசம் இல்லாத ஒரு சமத்துவ நிலை உருவாக்கப்படும். அப்போதுதான் 'நந்தனார் மடம்' தொடங்கி, சாதி வித்தியாசம் அற்ற ஒரு சமநிலையை உருவாக்கிடும் கனவைக் கண்ட திரு சகஜானந்தா சுவாமிகள் போன்றோரின் சமத்துவக் கனவுகள் நனவாகும்.*

# நிழலற்ற நாள்தான் ஆண்டின் தொடக்கமா?

**முனைவர் தேமொழி**
*சான் ஃபிரான்சிஸ்கோ, அமெரிக்கா*



*'எது தமிழ்ப் புத்தாண்டு?' 1971ஆம் ஆண்டு முதல் தமிழ்நாடு அரசால் அதிகாரப்பூர்வமான முறையில் பின்பற்றப்படும் தைத் திங்களின் முதல் நாளா அல்லது அதுநாள் வரையில் வழக்கத்தில் இருந்துவந்த சித்திரைத் திங்களின் முதல் நாளா என்ற புத்தாண்டு குறித்த சர்ச்சைகள் தமிழகத்தில் ஒரு தொடர்கதை. ஆனால், இந்த இருநாட்களும் அல்ல, தொல் தமிழ் நாட்டில் ஆண்டின் தொடக்கமாக இருந்தது ஆவணித் திங்கள் முதல் நாள்தான் என்பதற்கு அசைக்கமுடியாத சான்றுகள் உள்ளன.*

*எனவே சித்திரை முதல் நாள் ஆண்டின் தொடக்கமாகவும், அதன் வியாழவட்ட 60 ஆண்டுகள் சுழற்சி முறைக் கணக்கிடலில் பயன் கொள்ளப்பட்ட 'வடமொழி ஆண்டுப் பெயர்கள்' கொண்ட காலக்கணிப்பு முறை வழக்கத்திற்கு வந்தது பிற்காலத்தில் நிகழ்ந்த ஒரு மாற்றம் என்பதை எளிதில் புரிந்து கொள்ள முடியும். வைதீகத்தின் தாக்கம் கொண்டுவந்த விளைவே இடையில் தொடங்கிய சித்திரைத் திங்கள் புத்தாண்டு வழக்கமாகும். அந்நாட்களில் அக்காலத்தில் ஆட்சியிலிருந்த அரச ஆதரவுடன் சித்திரைத் திங்கள் புத்தாண்டு வழக்கம் தமிழகத்தில் நடைமுறைக்கு ஏற்றுக் கொள்ளப்பட்டது எனலாம்.*

*தைத்திங்கள் புத்தாண்டு விரும்பிகளோ அல்லது சித்திரைத்திங்கள் புத்தாண்டு விரும்பிகளோ தங்கள் வாதத்தை ஆணித்தரமாக நிறுவுவதற்கென இரு பிரிவினருமே 'தைதான் தமிழ்ப் புத்தாண்டின் தொடக்கம்' என்பதற்கோ, அல்லது 'சித்திரைதான் தமிழ்ப் புத்தாண்டின் தொடக்கம்' என்பதற்கோ உறுதியான சான்றுகள் எதுவுமே அளித்தது இல்லை. இந்த மாதம்தான் தமிழ்ப்புத்தாண்டின் தொடக்கம் என்று "உறுதியாக அறுதியிட்டு நேரடியாகக் கூறாத" கல்வெட்டுப் பதிவுகள், இலக்கிய வரிகள் போன்றவற்றை எல்லாம் இயன்றவரை மேற்கோள் கொடுத்து வாதிடுவார்கள்.*

*சித்திரை என்பதற்கு அறிவியல் மற்றும் வானியல் அடிப்படையில் சான்று கொடுக்க முற்படுகையில், தஞ்சை தமிழ்ச் சங்கத்தின் சார்பில் சித்திரையில் தமிழர் புத்தாண்டு என்ற உரையை பேராசிரியர் முனைவர் சி.கோ.தெய்வநாயகம் வழங்கினார். இவ்வுரையில் நிழலற்ற நாள்தான்*

ஆண்டின் தொடக்கமாக அமைகிறது, தமிழர் புத்தாண்டின் தொடக்கம் அறிவியல் அடிப்படையில் வானியல் நிகழ்வை அடியொற்றி அமைகிறது என்று கூறுகிறார். அந்த உரையில் நிழலற்ற நாளில் ஆண்டின் தொடக்கம் என்று




அவர் விளக்கும் பகுதியின் சுருக்கம் அடுத்து கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

புத்தாண்டு என்பது தமிழர்களுக்கு எப்பொழுது தொடங்குகிறது என்றால், வானியல் நிகழ்வுகளின்படி, அறிவியல் அடிப்படையில் வலசை போகும் சூரியனின் வடபுல நகர்வில் சித்திரை திங்களில் மேஷ ராசியில் சூரியன் நுழையும் பொழுது, அரைநாள் நண்பகல் பொழுதில் இரு குச்சிகளை வைத்து அவற்றின் நிழல் மூலம் காலத்தை அளவிட்ட பண்டைய நாட்களில், சூரியன் மிகச் செங்குத்தாக வான் உச்சியில் வரும்பொழுது கோலின் நிழல் சாய் கோண நிலையில் விழாமல், கோலின் அடியிலேயே விழும் நாள்தான் ஆண்டின் தொடக்கம் எனக் கொள்ளப்பட்டது. எனவே சித்திரைத் திங்களின் நிழலற்ற நாளில் இளவேனில் பருவத்துடன் தமிழர் புத்தாண்டு தொடங்குகிறது என விளக்குகிறார் (https://www.youtube.com/watch?v=idthwuXDA1s&t=382s).

நிழலற்ற நாள் என்பது பண்டைய நாட்களில் பருவ கால அளவீட்டின் பகுதியாக இருந்திருக்கக் கூடும். அதற்கான வாய்ப்புண்டு. இருப்பினும் இது ஓர் அறிவார்ந்த கணிப்பு (educated guess). இது மிகப் பொருந்தக்கூடிய ஒன்று என்றாலும், சான்றுக் குறிப்புகள் அற்ற ஒரு யூகம் என்பதில் ஐயமில்லை.

இதில் முக்கியமாக கவனிக்கப்பட வேண்டிய ஒன்று என்னவெனில்; நிழலற்ற நாள் என்ற வானியல் நிகழ்வு ஆண்டில் இருமுறை நிகழ்கிறது. புவிநடுக்கோட்டிற்கு (Equator) அருகில், கடக ராசிக்கும் (tropic of cancer) மகர ராசிக்கும் (tropic of Capricorn) இடையே உள்ள வெப்ப மண்டலப் பகுதியில் (tropical region) உள்ள இடங்கள் ஆண்டிற்கு இருமுறை நிழலற்ற நாட்களை எதிர்கொள்ளும்.

*1. சூரியனின் வடதிசைச் செலவில் சித்திரையில் ஒருமுறை நிழலற்ற நாளும், 2. சூரியனின் தென்திசைச் செலவில் ஆவணியில் ஒருமுறையும் நிழலற்ற நாள் நிகழ்கிறது. மக்கள் சித்திரையில் வரும் நிழலற்ற நாளைப் பேசுவதைப் போல ஆவணியில் வரும் நிழலற்ற நாளுக்கு முக்கியத்துவம் தருவதாகத் தெரியவில்லை. சித்திரை புத்தாண்டு நிழலற்ற நாளில் என்ற கோட்பாடு ஆவணி நிழலற்ற நாளுக்கும் பொருந்துமன்றோ?*

*நிழலற்ற நாள் (Zero Shadow Day) என்ற வானியல் நிகழ்வின் அறிவியல் பின்னணி:*

*தன்னைத்தானே சுற்றிக்கொண்டு, சூரியனை நீள்வட்டப்பாதையில் சுற்றி வரும் புவி தன் அச்சில் தோராயமாக 23.5° சாய்வாகச் சுற்றுகிறது. துருவங்கள் மாறி மாறி சூரியனை அணுகியும் விலகியும் சாய்கோணத்தில் சுற்றுவதால் புவியில் பருவநிலை மாறுதல்கள் ஏற்படுகிறது. வானில் சூரியனின் நகர்வு நாள்தோறும் மாறும். சூரியனுடைய நகர்வின் அடிப்படையில் (சூரியனைச் சுற்றிய பூமியின் சுழற்சியின் அடிப்படையில்) பருவங்கள் இயற்கையாக அமையும். புவியின் தென் துருவம் சூரியனை நோக்கிச் சாய்ந்து சுற்றுகையில் வடதுருவப் பகுதியில் நீண்ட இரவும், புவியின் வட துருவம் சூரியனை நோக்கிச் சாய்ந்து சுற்றுகையில் தென் துருவப் பகுதியில் நீண்ட இரவும் ஏற்படும்.*




*புவியின் நிலநடுக்கோட்டிலிருந்து கிடைக்கோடு (Latitude) - மகரரேகை 23.5° அளவில் உள்ள தென் மண்டலப் பகுதியும், நிலநடுக்கோட்டிலிருந்து கிடைக்ககோடு - கடக ரேகை 23.5° அளவில் உள்ள வட மண்டலப்பகுதியும் உள்ள புவியின் வெப்ப மண்டலப் பகுதியில் உள்ள இடங்கள் ஆண்டிற்கு இரண்டு நாட்களில் சூரியனை மிகச் சரியாக அதன் வான் உச்சியில் கொண்டிருக்கும், அந்நாட்களில் அப்பகுதியில் நிழலற்ற நாள் ஏற்பாடும். கடகரேகை மகரரேகைகளுக்கு அப்பால் உள்ள வட துருவ தென் துருவப்*

*பகுதிகளில் சூரியன் வான் உச்சியை அடையாது என்பதால் அப்பகுதிகளில் நிழலற்ற நாட்கள் ஏற்பட வாய்ப்பில்லை.*

*டிசம்பர் 22 குளிர்காலக் கதிர்த்திருப்ப நாள் (solstice), ஜூன் 21 கோடைக்கால கதிர்த்திருப்ப நாள். இவ்வாறு சூரியன் வட தென் திசைகளை நோக்கி மாறி மாறி நகர்வது சூரியனின் தென்திசைச் செலவு என்றும் சூரியனின் வடதிசைச் செலவு என்றும் அழைக்கப்படுகிறது.*




*சூரியனின் தென்திசைச் செலவு/தட்சிணாயனம் (ஜூன் 21 — டிசம்பர் 22);*
*சூரியன் வடக்கிலிருந்து தெற்கு நோக்கிச் செல்லும் காலத்தினை தென்திசைச் செலவு என்று கூறுகின்றனர். இக்காலம் ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி என ஆண்டின் ஆறு மாதங்களாகும். தென்திசைச் செலவு ஆடித் திங்களில் தொடங்கி மார்கழியில் முடிகிறது.*

*சூரியனின் வடதிசைச் செலவு/உத்தராயணம் (டிசம்பர் 22 — ஜூன் 21);*
*சூரியன் தெற்கிலிருந்து வடக்கு நோக்கிச் செல்லும் காலத்தினை வடதிசைச் செலவு என்று கூறுகின்றனர். இக்காலம் தை, மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி, ஆனி என ஆண்டின் ஆறு மாதங்களாகும். வடதிசைச் செலவு தைத்திங்களில் தொடங்கி ஆனியில் முடிகிறது. சூரியனின் வடதிசைச் செலவு தொடக்க நாளில் தமிழகத்தில் தைப்பொங்கல் கொண்டாடப்படுகிறது.*

*நிழலற்ற நாள் என்பது நிழல் காண இயலா நாள் ஆகும். அது சூரியன் நாம் இருக்கும் பகுதிக்கு மேல் நேர் செங்குத்தாக வான் உச்சியில் உள்ள நாள். அன்று நண்பகலில் நம் நிழல் நாம் பார்க்க இயலாதவாறு நம் காலடியிலேயே விழுவதால் நிழலற்ற நாள் என்ற பெயர் பெற்றது. சூரிய நகர்வினால் பிற நாட்களின் நண்பகலில் நம் நிழல் சாய்கோணத்தில் விழுவதால் நண்பகலில் நம்மால் நம் நிழலைக் காண இயலும். நிழலற்ற நாள் என்ற வானியல் நிகழ்வு*

*புவியின் வெப்பமண்டலப் பகுதியில் ஆண்டுக்கு இருமுறை நிகழ்வதன் காரணம் சூரியன் வடக்கிலிருந்து தெற்கிலும், தெற்கிலிருந்து வடக்கிற்கும் வலசை போவதால்தான். புவியின் நிலநடுக்கோட்டில் இருந்து துருவங்களுக்கு உள்ள சூரியனின் சாய்வுக் கோணம் அளவிடப்படும். இந்த சாய்வுக் கோணத்தின் பாகை அளவும், நாம் இருக்கும் பகுதியின் கிடைக்கோடு இருக்கும் பாகை அளவும் சமமாக இருக்கும் நாளில் சூரியன் நம் தலைக்கு மேல் வான் உச்சியில் இருக்கும்.*



இந்தியாவின் நிழலற்ற நாட்கள்

*இந்த ஆண்டின் முதல் நிழலற்றநாளாக, ஏப்ரல் 25, 2023ஆம் நாள் அதிகாரப்பூர்வமாகக் கொண்டாடப்பட்டது. ஏப்ரல் 25ம் நாளில் ஆண்டின் முதல் நிழலற்ற நாளை எதிர்கொண்ட இதே பகுதிகளில் அடுத்த நிழலற்ற நாள் ஆகஸ்ட் 17 ஆம் நாள் ஏற்படும். இந்த ஏப்ரல் 25 மற்றும் ஆகஸ்ட் 17, 2023 நிழலற்ற நாட்கள் சென்னை, பெங்களூரு, மங்களூரு பகுதிகளை ஒட்டி அவற்றுக்கு அருகில் நிகழும் நிழலற்ற நாட்கள். இப்பகுதிகள் சற்றொப்ப ஒரே கிடைக்கோட்டில் அமைந்துள்ள இடங்கள். சூரியனின் தொடர்ச்சியான நகர்வினால் நிழலற்ற நாட்கள் என்பது இந்தியாவின் வெவ்வேறு பகுதிக்கும் மாறுபடும் என்பதைக் கொடுக்கப்பட்டுள்ள படங்கள் தெளிவாக விளக்கும். எடுத்துக் காட்டாக; மதுரையில் - ஏப்ரல் 15, ஆகஸ்ட் 27 ஆகிய நாட்களிலும்; கோயம்புத்தூரில் - ஏப்ரல் 18, ஆகஸ்ட் 24 ஆகிய நாட்களிலும் நிழலற்ற நாட்கள் ஏற்படும்.*

*இந்தியத் துணைக்கண்ட நிலப்பரப்பில் நிழலற்ற நாட்கள் சூரியன் அப்பகுதிகளின் உச்சிக்கு வரும் நாளுக்கேற்ற வகையில் மாறுபடும். இவ்வாறு நிழலற்ற நாட்கள் தமிழகப் பகுதியில் நிகழும் நாட்கள் ஏப்ரல் 10 முதல் ஏப்ரல் 26 வரை ; ஆகஸ்ட் 16 முதல் செப்டெம்பர் 1 வரை.*

*தமிழ்நாடு, கேரளா பகுதிகளின் நிழலற்ற நாள்கள்:*

*10 ஏப்ரல் & 1 செப்டம்பர்— கன்னியாகுமரி, நாகர்கோவில், கூடங்குளம்*

*11 ஏப்ரல் & 31 ஆகஸ்ட்— கோவளம், திருவனந்தபுரம், திருச்செந்தூர்*

*12 ஏப்ரல் & 30 ஆகஸ்ட்— கொல்லம், தென்காசி, திருநெல்வேலி, தூத்துக்குடி*

*13 ஏப்ரல் & 29 ஆகஸ்ட்— கோவில்பட்டி, ராமேஸ்வரம், ராமநாதபுரம்*

*14 ஏப்ரல் & 28 ஆகஸ்ட்— ஆலப்புழா, சிவகாசி, விருதுநகர், பரமக்குடி*

*15 ஏப்ரல் & 27 ஆகஸ்ட்— கொச்சி, மதுரை, சிவகங்கை, காரைக்குடி*

*16 ஏப்ரல் & 26 ஆகஸ்ட்— கொடைக்கானல், திண்டுக்கல், வேதாரண்யம்*

*17 ஏப்ரல் & 25 ஆகஸ்ட்— திருச்சூர், பாலக்காடு, திருச்சி, நாகப்பட்டினம்*

*18 ஏப்ரல் & 24 ஆகஸ்ட்— கோயம்புத்தூர், கரூர், காரைக்கால், பூம்புகார்*

*19 ஏப்ரல் & 23 ஆகஸ்ட்— கோழிக்கோடு, ஊட்டி, ஈரோடு, சீர்காழி, சிதம்பரம்*

*20 ஏப்ரல் & 22 ஆகஸ்ட்— வயநாடு, முதுமலை, சேலம், நெய்வேலி, கடலூர்*

*21 ஏப்ரல் & 21 ஆகஸ்ட்— தர்மபுரி, விழுப்புரம், பாண்டிச்சேரி*

*22 ஏப்ரல் & 20 ஆகஸ்ட்— மைசூர், திருவண்ணாமலை, திண்டிவனம்*

*23 ஏப்ரல் & 19 ஆகஸ்ட்— ஓசூர், கிருஷ்ணகிரி, காஞ்சிபுரம், செங்கல்பட்டு*

*24 ஏப்ரல் & 18 ஆகஸ்ட்— மங்களூர், பெங்களூரு, வேலூர், ஆற்காடு, திருவள்ளூர்*

*25 ஏப்ரல் & 17 ஆகஸ்ட்— உடுப்பி, சித்தூர், திருத்தணி, மீஞ்சூர், புலிகாட்*

*26 ஏப்ரல் & 16 ஆகஸ்ட்— திருப்பதி, ஸ்ரீகாளஹஸ்தி, ஸ்ரீஹரிகோட்டா*

*இதில் நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது என்னவெனில் சித்திரை ஆண்டு தொடக்கம் நிழலற்ற நாளில் ஏற்படுகிறது என்ற கூற்று ஆவணியில் புத்தாண்டு தொடக்கம் என்பதற்கும் மாறுபாடின்றி அப்படியே பொருந்தும்.*

*பழந்தமிழர்கள் ஆவணியில்தான் ஆண்டைத் தொடங்கினார்கள். இன்றும் பண்டைய தமிழகத்தின் ஒரு பகுதியாக அன்றைய சேரநாடாக இருந்த இன்றைய கேரளாவில் ஆவணியின் முதல்நாள்தான் புத்தாண்டு தொடங்குகிறது.*

*இன்றைய 1. வழக்காறுகள், 2. இலக்கண, 3. இலக்கிய, 4. நிகண்டுகள் மற்றும் 5. கல்வெட்டுகள் தரும் காலக்குறிப்புகள் அடிப்படையில் ஆவணியே தமிழ்ப் புத்தாண்டின் தொடக்கம் என்பதற்கான சான்றுகள் 'ஆவணியே தமிழ்ப் புத்தாண்டின் தொடக்கம்' என்ற கட்டுரையில் கீழ் வருமாறு காட்டப்பட்டுள்ளது.*

*(1) வழக்காறு: தமிழரிடம் இருந்து பிரிந்த சென்ற பழந்தமிழ் மலையாள உறவுகள் தங்களுக்கென பொ.ஆ. 825ஆம் ஆண்டு முதல் புதியதாகக் கட்டமைத்துக்கொண்ட 'கொல்லம் ஆண்டு' என்ற வளர்ச்சி முறைக் காலக் கணக்கிடல் முறையில் ஆண்டின் தொடக்கம் ஆவணியைத் தொடக்கமாகக் கொண்டிருக்கும் வழக்கம் ஒரு சான்று. இவ்வழக்கம் பழந்தமிழர் பண்பாட்டின் எச்சம் எனலாம். கேரளத்தில் ஆகஸ்ட் 17ஆம் நாள், ஆவணித் திங்கள் முதல் நாளில்தான் புத்தாண்டு தொடங்குகிறது. இது வழக்கில் உள்ள சான்று.*

*(2) இலக்கணம்: தொன்மையான தமிழ் நூலான தொல்காப்பியத்தின் பொருளதிகாரம் நூற்பா (அகத்திணையியல்: 6 — 10) அகத்திணை இயலில் ஐவகை நிலங்களுக்குரிய பொழுதுகளை வகுத்துரைக்கும் பொழுது; "காரும் மாலையும் முல்லை; குறிஞ்சி கூதிர் யாமம் என்மனார் புலவர்" என்று கார் காலத்தினைத் தொடக்கமாகக் கொண்டு கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்னும் பெரும் பொழுதுகளைக் குறிப்பிட்டுள்ளார் தொல்காப்பியர். இத் தொல்காப்பிய நூற்பாவிற்கு உரை எழுதிய 14-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த நச்சினார்க்கினியரும் இதன் பொருளைத் தெளிவாக விளக்கி "காலவுரிமை எய்திய ஞாயிற்றுக்கு உரிய சிங்கவோரை முதலாகத் தண்மதிக்கு உரிய கற்கடகவோரை யீறாக வந்து முடியுந்துணை ஓர் யாண்டுமாதலின் அதனை இம்முறையானே அறுவகைப்படுத்து இரண்டு திங்கள் ஒரு காலமாக்கினார்" என்று விளக்கம் தருகிறார். அதாவது ஆவணி முதலாக ஆடி இறுதியாக உள்ள காலம் ஓர் ஆண்டாகும் என்று தெளிவு படுத்துகிறார். இது எழுத்தில் ஆவணப்படுத்தப்பட்ட சான்று.*

*(3) இலக்கியம்: தொல்காப்பிய நூற்பா சொல்வது போலவே சிலப்பதிகாரம், மதுரைக் காண்டம் (14. ஊர் காண் காதை: 86 — 125), 'கார்' அரசாளன் வாடையொடு வரூஉம் காலம் அன்றியும் (96) என்று தொடங்கும் பாடல் பகுதியில் இளங்கோவடிகள் கார் முதலிய ஆறு வகைப் பருவங்களையும் அதே முறையில் வரிசைப்படுத்தி எழுதியுள்ளார். மதுரை மாநகரத்து மகளிர் இளநிலா முற்றத்தில் தம் காதலருடன் படுக்கையில் கிடந்து பழைய நினைவுகளில் மனம் செலுத்தினராம். தங்களின் நினைவோட்டத்தில் அப்பெண்கள் கார்காலம், கூதிர்*

*காலம், முன்பனிக் காலம், பின்பனிக் காலம், இளவேனிற் காலம், முதுவேனிற் காலம் என வரிசையாக ஒவ்வொரு கால நிகழ்வுகளையும் நினைவு கூர்வதாக இளங்கோவடிகள் சொல்லிச் செல்கிறார்.*

*(4) நிகண்டுகள் (அகராதி நூல்கள்): ஆவணியே தமிழ்ப் புத்தாண்டின் தொடக்கம் என்பதற்கு மற்றொரு உறுதியான, எழுத்தில் ஆவணப்படுத்தப்பட்ட சான்றை முதல் நிகண்டான, 10 ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்ட சேந்தன் திவாகரம் என்னும் 'திவாகர நிகண்டு' கொடுக்கிறது.*

*"அறு வகைப் பருவமாவன*
*காரே, கூதிர், முன் பனி, பின் பனி,*
*(சீர்) இள வேனில், முது வேனில் (என்று ஆங்கு)*
*இரு மூன்று வகைப் பருவம்; (அவை தாம்*
*'ஆவணி முதலா' இரண்டு இரண்டாக*
*மேவின திங்கள் எண்ணினர் கொளலே)."*




தமிழ்நாட்டுப் பகுதியில் நிழலற்ற நாட்கள்

*— (6 பெயர்கள்) [சேந்தன் திவாகரம்-தெய்வப் பெயர் தொகுதி-134]*
*இருதிங்கள் சேர்ந்த காலப்பகுதி பருவம் எனப்படும். ஆவணி தொடங்கி இரண்டிரண்டு மாதங்களாக முறையே கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என ஆறு பருவங்களைக் கொண்டது ஓர் ஆண்டு என்பதாகவும், கார் பருவத்தை முதன்மையாக வைத்து அது தொடங்கும்*

*ஆவணி முதலாக வைத்துப் பிற மாதங்களை எண்ணியுள்ளனர் என்பதை இப்பாடல் கூறுகிறது. எனவே இந்த நூல் 10 ஆம் நூற்றாண்டிற்கும் முற்பட்ட தமிழக இலக்கிய வழக்காறுகளைப் பதிவு செய்யும் ஆவணமாக இது திகழ்கிறது என்பதை மறுக்க இயலாது. இதுவும் ஆண்டின் தொடக்கத்தைக் கார்ப்பருவத்தினை முதலாகக் கொண்டு, ஆவணி மாதத்திலிருந்து தொடங்கினர் பழந்தமிழர் என்ற தொல்காப்பிய நூற்பாவை அடியொட்டியே அமைந்துள்ளதைக் காணலாம். ஒவ்வொரு பருவத்திற்கும் இரண்டிரண்டு திங்களாகக் காலத்தைப் பகுத்த முறையை "ஆவணி முதலா இரண்டிரண்டாக மேவின திங்கள் எண்ணினர் கொளலே" என்றுதான் திவாகரப் பாடல் குறிப்பிடுகிறது.*




*திவாகரா நிகண்டைத் தொடர்ந்து, அதையொட்டி விரித்து எழுதப்பட்ட பிங்கலநிகண்டும் "ஆவணி முதலா இரண்டு இரண்டாக மேவிய திங்கள் எண்ணினர் கொளலே. (வான்வகை சூத்திரம் 210) " என்ற ஆண்டுப் பிறப்பு ஆவணி முதலாகத் தொடங்குகிறது என்றே கூறுவதுடன் சித்திரையில், வசந்தத்தில் ஆண்டு தொடங்குவது ஆரிய சமஸ்கிருத வழக்கம் என்றும் கூறுகிறது. இந்த வரிசையில் காலத்தால் பிற்பட்ட, 16 ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட சூடாமணி நிகண்டு ஆண்டின் தொடக்கம் என்பதை, "ஆவணியே ஆதி" மற்று இரண்டு இரண்டு மாதம் பருவம் மூவிரண்டும் ஆய்ந்து பார்த்திடின் வாய்த்த பேராம். (சூத்திரம் 6 பெயர்கள்-95) என்று அறுதியிட்டுக் கூறுகிறது. எனவே 16 ஆம் நூற்றாண்டு வரை தமிழர்களுக்கான*

*ஆண்டின் தொடக்கம் ஆவணியில் தொடங்குகிறது என்பதற்கு உறுதியான, எழுத்தில் ஆவணப்படுத்தப்பட்ட சான்றுகள் நிகண்டுகளிலும் இருக்கின்றன.*

*(5) கோயில் கல்வெட்டுகள்: திருவல்லிக்கேணி கோயிலில் கிடைக்கும் கல்வெட்டுகளை அவை வெட்டப்பட்ட காலமான 9ஆம் நூற்றாண்டு முதல் 19ஆம் நூற்றாண்டுவரை காலக்கோட்டில் வரிசைப்படுத்தி ஆராய்ந்ததில்; பிரபவ முதல் அட்சய என்று வடமொழியில் பெயரிடப்பட்டுள்ள "அறுபது வியாழ வட்ட ஆண்டுகள்" கொண்ட கணக்கு விஜயநகர மன்னர்கள் ஆட்சியில்தான் தொடங்குகிறது என்பதைத் தெரிந்து கொள்ள முடிந்தது. இந்தக் காலக் குறிப்பு மாற்றம் விஜயநகர ஆட்சிக் காலக் கல்வெட்டுகள் தொடங்கித்தான் திருவல்லிக்கேணி கோயிலில் கிடைக்கிறது. விஜயநகர ஆட்சிக் காலத்திற்கு முன்னர், இந்தப் பேரரசின், இந்த மன்னரின், இத்தனையாவது ஆட்சிக் காலத்தில் வெட்டப்பட்ட கல்வெட்டு இது என்று குறிப்பிடும் முறைதான் கல்வெட்டுகளில் முன்னர் வழக்கமாக இருந்திருப்பது தெரிகிறது.*

*ஆகவே மேற்குறிப்பிட்ட,*

*(1) பழந்தமிழர் காலக் கணக்கீட்டின் தொடர்ச்சியாக பண்டையத் தமிழ் உறவுகளான கேரள நாட்டில் வழக்கில் இருக்கும் கொல்லம் ஆண்டு கணக்கிடல் முறை,*

*(2) தொல்காப்பியரின் பொருளதிகாரம் (அகத்திணையியல்: 6 — 10),*

*(3) சிலப்பதிகாரம், மதுரைக் காண்டம் (14. ஊர் காண் காதை: 86 — 125),*

*(4) திவாகர, பிங்கல, சூடாமணி நிகண்டுகள் தரும் செய்திகளின் ஒப்பீடு,*

*(5) திருவல்லிக்கேணி கோயிலின் கல்வெட்டுத் தொடர் வரிசை அறியத் தரும் செய்திகள் மூலம் ஆவணியே தமிழர்களுக்கான ஆண்டின் தொடக்கமாக இருந்திருக்கிறது என்பது தெளிவாகிறது.*

*இப்பொழுது இந்த வரிசையில் . . .*
*முன்னர் கொடுக்கப்பட்ட நிழலற்ற நாள் ஆண்டின் தொடக்கம் என்ற வானியல் மற்றும் அறிவியல் அடிப்படை விளக்கமும் பொருந்துவதைக் காணலாம்.*

*பிற்காலத்தில் தமிழகத்தில் ஏற்பட்ட நிகழ்வுகளால் ஆட்சிகளும் சமயக் காட்சிகளும் மாறியதும், அவற்றின் எதிரொலியாகத் தமிழரின் காலக்கணக்கிடலில் மாற்றம் நிகழ்ந்துள்ளதும் சான்றுகள் மூலம் தெளிவாகிறது.*

*தமிழ் நாட்டை ஆண்ட அந்நியர்களான நாயக்கர்கள் ஆட்சிக் கால கட்டத்தில் ஆரூடம் பார்க்க வழக்கிலிருந்த ஆரிய வைதீகப் பண்பாட்டின் சித்திரைத் திங்களைத் தொடக்கமாகக் கொண்ட காலக் கணக்கிடும் முறை தமிழகத்தின் கோயில் வளாக எல்லையைக் கடந்து பொதுமக்களின் வாழ்வுமுறையில் நுழைந்துள்ளது. இம்மாற்றம் சோதிட நாட்காட்டியின் அடிப்படையில் அக்கால அரச ஆதரவுடன் ஏற்படுத்திக் கொண்ட மாற்றம் என்பதும் தெளிவாகிறது. தமிழகத்தில் அதுவரை வழக்கத்திலிருந்த ஆவணிப் புத்தாண்டு முறை நீக்கப்பட்டு வைதீக சித்திரைப் புத்தாண்டு வழக்க முறைக்கு புத்தாண்டு மாற்றப்பட்டது என்றுதான் தரவுகள் மூலம் முடிவெடுக்க இயலும். ஆகவே தரவுகளின் அடிப்படையில் பழந்தமிழர் ஆவணித் திங்களையே ஆண்டின் தொடக்கமாகக் கொண்டிருந்தனர். ஆவணியே தமிழ்ப் புத்தாண்டின் தொடக்கம் என்று உறுதியாகக் கூறலாம்.*

*கட்டுரைக்கு உதவியவை:*

*நிழல் இல்லா நாள்*
*https://astron-soc.in/outreach/wp-content/uploads/2023/04/ZSD_Tamil.pdf*

*தமிழ்நாடு-கேரளா நிழல் இல்லா நாள்*
*https://astron-soc.in/outreach/wp-content/uploads/2017/04/zsd_kerala_tn.jpg*

*நிழல் இல்லா நாள் - ஆண்ட்ராய்ட் கைபேசி செயலி*
*https://play.google.com/store/apps/details?id=com.alokm.zsd*

*The Public Outreach & Education Committee of the Astronomical Society of India (ASI - POEC)*
*https://astron-soc.in/outreach/activities/zero-shadow-day/*

*India Sunrise and Sunset Times*
*https://www.sunrisesunsettime.org/asia/india/*

*சித்திரை தமிழர் புத்தாண்டு -பேராசிரியர் முனைவர் சி.கோ.தெய்வநாயகம்*
*https://www.youtube.com/watch?v=idthwuXDA1s&t=380s*

*ஆவணியே தமிழ்ப் புத்தாண்டின் தொடக்கம், தேமொழி, இலக்கிய மீளாய்வு, பக்கம் 97- 112, தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகம், 2023.*

*நன்றி: படங்கள் உதவி — விக்கிப்பீடியா மற்றும் இந்திய வானியல் கழகத்தின் கல்வி, பொதுமக்கள் தொடர்பு குழு*
*https://astron-soc.in/outreach/activities/zero-shadow-day/*

# சமய வழிபாட்டில் புனித நூலும் புனித உருவமும்



**ஆனந்த் அமலதாஸ் சே.ச.,**
*தியான இல்லம்,*
*சென்னை*

*ஒரு புனித நூல் இறைவன் வெளிப்படுத்திய வாக்கு அல்லது சமய மரபு ஏற்றுக்கொண்ட வரையரைகள் வழிபாட்டின் அடிப்படை என்பது கிறித்தவ மரபில் உள்ளவர்களுக்கு நன்றாகத் தெரியும். புனித நூலை வாசிப்பதும் அதற்கு விளக்கம் கூறுவதும் இறைவழிபாட்டு நிகழ்வின் மையம் ஆகும். எடுத்துக்காட்டாக, கத்தோலிக்கக் கிறித்தவர்கள் மத்தியில் புனித நூலை அடிப்படையாகக் கொண்ட வழிபாட்டில் நற்கருணையாக மாறும் மைய நிகழ்வு உச்சரிக்கப்படும் புனிதச்சொல்லில் அடங்கியுள்ளது.*

*இன்னும் ஒருபடி தாண்டிப்போனால், புனித நூலை நாடகமாக நடத்துவதில் கிழக்கித்திய கிறித்தவமரபு வழிபாடு நிகழ்கிறது. இங்குப் புனித நூலோடு புனித உருவத்தையும் முன் வைப்பதும் முக்கிய இடம் பெறுகிறது. உருவம் அமைப்பதற்கு எதிராக நடந்த போராட்டத்திற்கு முன் இரண்டு கண்ணோட்டோங்கள் எதிர் எதிராக நிற்கின்றன. ஒருபக்கம், இறைவன் தன்னைத் தனது சொல் வழியாக வெளிப்படுத்துகிறார் என்ற நிலைப்பாடு; மறுபக்கம், இறைத் தன்மையை – கிறிஸ்துவும் அவரது அன்னையும் - திருநிலைப்படுத்தப்பட்ட உருவங்கள் வழியாகவும் வழிபாடு நிகழ்த்த முடியும் என்பது.*

*இந்த வேறுபாடு கிறித்தவம் எப்படி இறைவனைப் புரிந்து கொள்கிறது என்பதில் மட்டும் காணப்படுவதில்லை. சமயங்களின் வரலாற்றில் இது முடிவுகூறும் அடிப்படை அம்சமாக இருக்கிறது. யூத மரபு கடவுளுக்கு உருவம் அமைப்பதை எதிர்க்கிறது. அது நூலை மையம்கொண்ட ஒரு சமயம். கடவுள் தனது சொல்லில், தான் வெளியிட்ட சட்ட ஓழுங்குகளில் தன்னை வெளிப்படுத்துகிறார் என்கிறது. மக்கள் கேட்பது கடவுளின் குரல். மோசேயிடம் இறைவன் பேசுகிறார். "ஆண்டவர் மோசேயை நோக்கிப் பின்வருமாறு உரைத்தார். இவ்வாறு நீ இஸ்ராயேல் மக்களிடம் சொல்: நான் வானத்திலிருந்து உங்களோடு பேசினேன் என்பதை நீங்கள் கண்டீர்கள்." (விடுதலைப் பயணம் 20இ 22). அதன்படி அவர்கள் கோவிலும் கூட இறைவன்*

*தங்கி இருக்கும் இடம் அல்ல; மாறாக, அவர் இஸ்ராயேலிடம் பேசும் இடம். அங்கே அவர் பெயர் முன் வைக்கப் படுகிறது.*

*கிறித்தவம் யூதமரபின் நூலை மையம் கொண்ட அம்சத்தை ஏற்றுக் கொண்டது. அதே சமயம், கிரேக்கச் சிந்தனைகளை ஏற்றுக்கொண்டது. பவுலடியார் ஏற்கனவே கிரேக்க மரபோடு இணைக்கிறார். சொல்லும் உருவமும் ஒன்றோடொன்றாக இணைகின்றன. "இப்போது நாம் கண்ணாடியில் காண்பதுபோல மங்கலாய்க் காண்கிறோம். ஆனால், அப்போது நாம் நேரில் காண்போம்." (1 கொரிந்தியர் 13, 12). இருப்பினும் நம்பிக்கைக்கு முதன்மைத்துவம் கொடுத்து நேரில் பார்ப்பதற்கு எதிராகச் சொல்லுகிறார். "நாம் காண்பவற்றின் அடிப்படையில் அல்ல, நம்பிக்கையின் அடிப்படையிலேயே வாழ்கிறோம்." (2.கொரிந்தியர் 5, 7) என்கிறார். இந்த நம்பிக்கையின் துணிவு கிரேக்க மரபு முன்வைக்கும் தெளிவான சிந்தனைக்கும் மறைந்திருக்கும். "கண்ணுக்குப் புலப்படாதவரைக் கண்ணால் பார்ப்பவர் போன்று உறுதியாய் இருந்தார்." (எபிரேயர் 11, 27).*

***இந்திய மரபுகள்:***

*இந்திய மரபுகள் பல்வேறு முகங்கள் கொண்டவை. நூலை மையம் கொண்ட அம்சங்களும், ஆழ்ந்த இறையனுபவம் கொண்ட அம்சங்களும் இந்திய மரபுகளின் உருவ வழிபாட்டை வரையறுக்கின்றன.*

*வேதத்தின் தொடக்கம் புனிதமானது என்ற நம்பிக்கையில் ஏற்றுக் கொள்ளப்பட்ட நூல் என்பதால் அதற்கு நிர்ணயிக்கும் அதிகாரம் உண்டு. அந்த நூல்களின் உட்பொருளை நோக்கினால், அவை வழிபாட்டோடு இணைந்துள்ளவையாக உள்ளன. இந்த வழிபாட்டுச் செயல்களும் நூலை மையங்கொண்ட சமயங்கள் போல, வழிபாட்டில் நூல் அடிப்படையான இடம் பெறவில்லை. மாறாக பலிப்பொருட்களை அர்ப்பணிப்பதின் விளக்கம் முக்கிய இடம் பெறுகிறது. அத்தகைய வழிபாட்டுச் செயல்களிலிருந்து பல்வேறு பாடல்கள் உருவாகின. அதோடு மெய்யியல் - ஆழ்ந்த இறை அனுபவம்கொண்ட சிந்தனைகளும் இடம் பெறுகின்றன. அவை உபநிடதங்களில் அதன் உச்சக்கட்ட நிலையை அடைகின்றன.*

*இங்குள்ள ஆழ்ந்த இறை அனுபவம் அதே சமயம் வழிபாட்டை உள்வாங்கியதாகவும் அமைந்துள்ளது. அந்தத் தாக்கத்தின் விளைவாக, ஒரு குறிப்பிட்ட தெய்வ நிலை மையமாக இடம் பெறவில்லை. மாறாக, பக்தியின் மையம் தனிப்பட்ட தெய்வீக நிலை தாண்டிய, எல்லாப் பன்முகப் பார்வை கொண்ட பிரமனாக வெளிப்படுகிறது. அதாவது, பிரமனோடு ஆன்மா*

*இணையும் ஒன்றிய நிலையைப் புரிந்து கொள்வதில் அடங்கியுள்ளது. இன்னும் தெளிவாகச் சொல்ல வேண்டுமானால், பழைய வழிபாட்டின் செயலோடு – கர்மாவின் வழியோடு – 'ஞானத்தின் வழியும்' இணைகிறது. அது புனிதமற்ற உலக வாழ்விலிருந்து விடுவிக்கிறது. வாழ்வின் மறுபிறப்பின் வழியாக எழுந்த புனிதமற்ற நிலை உருவமற்ற நிலையோடும் தனித் தன்மையோடும் நெருங்கிய தொடர்பு கொண்டது. அதுதான் "பெயரும்-உருவமும்" (நாம-ரூப) என்ற சொல்லாடலாக விளக்கம் பெறுகிறது. கிரேக்க மரபுக்கு மாறாக, "உள்ளது" என்பது இங்கு உருவமற்றது. உலகத்தின் வெளித் தோற்றங்களையும், கடவுளர்களையும் தாண்டிச்செல்வதும், தொடக்க நிலையின் ஒன்றிய நிலைக்குத் திரும்பிச் செல்வதும்தான் அதன் குறிக்கோள்.*



*உபநிடதங்களின் ஆழ்ந்த ஒன்றிய விழிப்புணர்வு வெளிப்படையான வழிபாட்டு நிலையைத் தாண்டியது. சமயப் போதனைகளையும் புறந்தள்ளி விடுகிறது. அப்பொழுதுதான் மனதுக்கும் சொல்லுக்கும் அப்பாற்பட்ட ஒன்றில் இரண்டறக் கலக்க முடியும். ஏனெனில், இந்த அறுதி நிலைப்பாட்டை கருத்தளவில் புரிந்துகொள்ள முடியாது. இங்கு நூலை மையங்கொண்ட சமயத்தின் அம்சமாகத் தோன்றினாலும், வழிபாட்டை உள்வாங்கி, இறுதியில் அதையும் தாண்டிய ஆழ்ந்த ஆன்மீக நிலையில் அடங்கியுள்ளது. இதை நாம் பக்தி முறையில் உள்ள தனிப்பட்ட உருவத்தை, நூலையும் வழிபாட்டையும் மையங்கொண்ட சமயமாகச் சிந்திக்க வேண்டும்.*

*இருந்தாலும் கூட, இந்து சமயத்தின் நூலை மையங்கொண்ட அடிப்படை அம்சங்கள், நூள்களின் அதிகாரத்தில் எழுந்த எண்ணற்ற விளக்கங்கள் போன்றவை இதற்குச் சான்றாக நிற்கின்றன. ஆதிசங்கரர் (8 ஆம் நூற்றாண்டு),*

இராமானுசர் (11 ஆம் நூற்றாண்டு) போன்றவர்கள் மீண்டும் மீண்டும் புனித நூல்களை நம்பிக்கையோடு ஏற்றுக்கொள்ள அழைக்கின்றனர்.

வரலாற்றுப் போக்கில் பகவத்கீதையும் விவிலியம்போல இந்து மரபை நூலை மையங்கொண்ட சமயமாக்கி விடுகிறது. இஸ்லாம் கிறித்தவம் போன்ற நூலை மையங்கொண்ட சமயங்களைச் சந்தித்தபின், ஒரு நூலின் அதிகாரப் பீடம் என்ற கேள்வி இந்து சமயத்தில் அதிக அளவில் முன் வைக்கப்படுகிறது.

இந்து சமயத்தவர் "நூலை மையங்கொண்ட மக்கள்" என்று இஸ்லாமியரை ஒருநாளும் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் என்றாலும், இந்து சமயமும் ஒரு நூலை மையங்கொண்ட சமயத்தின் அடிப்படை அம்சங்களைச் சுட்டிக்காட்டுகிறது. நற்செய்தியைக் கேட்பது ஒரு முக்கிய இடத்தைப் பெறுகிறது என்பதும் மறுக்க முடியாத ஒன்று. இந்த அம்சங்கள் வழிபாட்டுச் சமயங்களின் சிறப்புப் பண்புகள் இச்சமயத்தின் மறுபுறத்தைத் தெளிவாக முன் வைக்கிறது. அங்கே தெய்வீகம் உருவங்களில் வெளிப்படுகிறது. உருவத்தை நியதியாக ஏற்றுக் கொள்ளும்பொழுது அவை துணைச் சாதனங்களாக நிற்கின்றன. அதாவது, இறைவனின் உருவமற்ற தன்மையைப் புரிவதும், அதே சமயம் உருவம் சார்ந்த சிந்தனையை இந்தப் புரிதலின் முதல் படிகள் என்று நியாயப்படுத்துவதும் இந்து இறையியல் சிந்தனை சுட்டிக்காட்டும் அம்சங்கள்.

இருப்பினும், செயலளவில் தெய்வீகத்தைக் "காண்பதும்", தெய்வ உருவத்தை மையம் கொண்ட வழிபாடும் இந்தியச் சிந்தனையில் ஆழமாக வேரூன்றியுள்ளன. அதன் அடிப்படையில் கடவுளைக் "காண்பதும்" (தர்சனம்), தெய்வீக நிலையடைந்த பெரியோரைப் "பார்ப்பதும்" மீட்புக்குத் தேவையான சாதனம் எனும் பொருளும் இடம் பெறுகிறது. எவ்வளவுதான் கண்ணன் அர்சுனனுக்குக் கீதையில் அறிவுரை கூறினாலும் தெய்வீகக் கண்கொண்டு அவரது உருவத்தைப் பார்ப்பது அனுபவத்தின் உச்சக்கட்டமாக முன்வைக்கப்படுகிறது. (கீதை 11, 8).

கோவில் வழிபாட்டிற்கு உருவம் எவ்வளவு முக்கியம் என்பதைக் கடவுள்; உருவம் கொண்ட படங்கள் மட்டுமல்லாமல், கடவுளைப் புகழ்ந்து பாடும் எண்ணற்ற பாடல்களும் முக்கியம். இந்தப் பாடல்கள் இறை உருவத்தில்; குறிப்பிட்ட வெளிப்பாடுகளை எந்த எந்தக் கோவில்களில் பாடப்பட்டது என்றும் சிந்திக்க அழைப்பு விடுகின்றன. தென்னிந்திய தமிழ்மரபில் எழுந்த சிறப்புப் பாடல்கள் ஒரு குறிப்பிட்ட இறை உருவால் தூண்டப்பட்டது என்பதையும் தெளிவு படுத்துகிறது.

**பௌத்த மரபு:**

*பௌத்த மரபில் ஒருநிலைப்படுத்தும் சிந்தனை (தியானம்) ஒரு சிறப்பான தாக்கத்தை முன் வைக்கிறது. இவ்வழி எல்லாக் கடவுளர்களையும் தனிநிலை இயல்புகள் உடையன அல்ல, சார்பியல் கொண்டன என்று எல்லா வழிபாட்டு உருவங்களையும் விமர்சிக்கிறது. கிழக்கித்திய சமயங்களின் தொடக்க நிலையில் புத்தர் கூட தனிப்பட்ட சின்னமாக முன் வைக்கப்பட்டார். அச்சின்னம் அவரது தெளிவான மெய்ஞான ஒளியையும் அவரது போதனையையும் குறிப்பிட்டது.*

*மெய்ஞான ஒளியின் மரம், அந்த மரத்திற்கு முன் உள்ள வெறுமையான நாற்காலி, "இவ்வாறு முன்சென்றவர்களின்" (ததாகத) காலடித் தடங்கள், போதனையின் சக்கரம், அல்லது அந்த மூன்று சக்கரத்தால் அலங்கரிக்கப்பட்ட பீடம், போதனையும் சங்கமும் - இவற்றைச் சுட்டிக்காட்டும் அடையாளமாக இருக்கின்றன. வழிபாட்டு உருவத்திற்குப் பதிலாக சமயச் சடங்கில் இறப்பிற்குப்பின் உள்ள எச்ச மிச்சக் கூறுகளை உள்ளடக்கிய ஸ்தூபாவாக இருந்தது. அது எல்லாம் கடந்த "நிர்வாண" நிலையின் பொருளைக் காட்டும் உருவமாக உள்ளது.*

*பௌத்த மரபில் பேசப்படும் சொல்லுக்குத் திரும்புதல் போதனையில் (தர்மா) மையங்கொண்ட நிலையிலிருந்து தோன்றுகிறது. அந்த மரபு நம்பிக்கையைத் தூண்டுகிறது. மீட்புப் பெறுபவர்களுக்குத் தேவையான புரிதலுக்கு இட்டுச்செல்கிறது. அப்படித்தான் புத்தர் கடவுள் பிரமாவை விளக்குகிறார். அவர் வேண்டுதலுக்கு இணங்க தொடக்கநிலைத் தயக்கத்திற்குப் பிறகு போதனையை அறிவிக்க முடிவு செய்கிறார்.*

*"காதுள்ள ஒவ்வொருவருக்கும் நித்தியத்தின் கதவு திறக்கப்பட்டுள்ளது. பிறகு நம்பிக்கை தோன்றுகிறது. தேவையற்ற முயற்சிகளைத் தடுப்பதற்காக உயர்ந்த சொல்லை இன்னும் நான் உலகிற்கு அறிவிக்கவில்லை." (மஹாவக்கா 1, 5). புத்தரின் இறப்புக்குப் பிறகு அவரது போதனை ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும் என்பதை அவரது இறுதி உரையாடல் தெளிவாக்குகிறது.*

*"ஆனந்தா! ஒருவேளை உங்களுக்கு ஓர் எண்ணம் தோன்றலாம். இந்தச் சொல்லைப் பறைசாற்றிய ஆசிரியர் மறைந்து விட்டார். இனிமேல் வேறு எந்த ஆசிரியரையும் அழைக்கக்கூடாது. ஆனால் நிலைமையை அப்படிப் பார்க்கக் கூடாது. நான் பறைசாற்றி முன்வைத்த போதனையும் ஒழுங்குகளும் எனக்குப்பின் உங்கள் ஆசிரியர்." (தீர்க்க நிகாய XVI).*

*தொடக்கத்தில் சமயச் சடங்கு என்பது கடவுள் வழிபாடு அல்லது புத்தருக்குப் பணி செய்வது என்று பொருள் பெறவில்லை. மாறாக, சொல் வழிபாடு, தர்மாவுக்கு பணி செய்தல் என்று பொருள் கொண்டது.*

*சொல்லிற்கு அதிக அளவிலான முக்கியத்துவம் பற்றி அங்குள்ள "மூன்று கூடைகள்" (திரிபீடகம்) என்று ஒன்று சேர்க்கப்பட்ட பல்வேறு நூல்கள் தெளிவு படுத்துகின்றன. அதனால் பௌத்தத்தையும் நூலை மையங் கொண்ட சமயம் எனலாம். இருப்பினும் இது மேற்கு ஆசியாவில் தோன்றிய நூலை மையங்கொண்ட சமயங்களிலிருந்து வேறுபடுகிறது. அதாவது, இவர்களது புனித நூல்கள் ஒரு கடவுளால் வெளிப்படுத்தப்பட்டவை அல்ல. மாறாக, அவை எல்லாம் புத்தரிடம் இட்டுச் செல்பவை. கிறித்தவ புதிய ஏற்பாடுபோல தேர்ந்தெடுத்துத் தொகுக்கப்பட்டவை அல்ல. மாறாக, இந்த மரபில் தோன்றிய அனைத்தும் புத்தரைக் குறிக்கும் எனலாம்.*



*சமயம் சடங்கு மயமானதும் மஹாயான மரபில் தொடர்கிறது. அஜந்தா குகைகளிலும், (சில்க்) "பட்டுச்சாலை" யோரங்களிலும், சீனாவிலும் தோன்றிய கலை உருவங்களும், மனிதர்கள் மட்டுமல்ல, கடவுளர்களும், ஆவிகளும், யக்சா போன்றவை தோன்றின. இவைகளை எல்லாம் புத்தரின் போதனையைக் கேட்டு மகிழ்ந்ததாக முன்வைக்கின்றனர். புத்தர், அஜந்தா ஓவியம் போல, அவருடைய சங்கத்தின் மையமாக மட்டுமல்ல, மாறாக அண்டத்தின் மையமாக மஹாயான நூட்கள் அறிவிக்கின்றன. வரலாற்றுப் புத்தருக்கு அருகில், புத்தர் காலத்திற்கு முந்தியதும், உலகம் தாண்டிய புத்தர்களும்*

வணக்கத்திற்கு மையமாக இடம் பெறுகின்றன. இவை புனித உருவங்களாய் நிற்கின்றன.

சடங்காக மாறுவதற்கான நிர்ணயம் செய்யும் நூல் இறுதியாக "வஜ்ராயண" மரபில் நிறைவு பெறுகிறது. அங்கே பல விதமான புத்தர்களும், போதிசத்வர்களும், உலகைப் பாதுகாப்பவர்களும், போதனையைக் காப்பவரும், என்று வளர்ந்து கொண்டு வந்தது. இருப்பினும், பௌத்த மரபு திபெத்தில் - வஜ்ராயன மரபுக்குச் சொந்தமான நிலத்தில்- நூலை மையங்கொண்ட சமயம் என்ற பண்பை பௌத்தம் இழக்கவில்லை.



அடிப்படையில் சடங்கு முறை கிழக்கு ஆசியாவில் "சென";- மரபு அதைத் தனி நிலைமை கொண்டதல்ல, மாறாக, சார்பு நிலை கொண்டது என மாற்றியது. அதன் முக்கிய சின்னம் "வெறுமையான வட்டம்". சடங்கு உருவைத் தாண்டிச் சென்று பொருள்படச் செய்தது.

இறுதியாக, கிழக்கு ஆசியாவைப் பொறுத்தவரையில், அங்குத் தோன்றிய நம்பிக்கை வடிவங்களைப் புனித நூல்கள் இருந்தாலும்கூட, நூலை மையங்கொண்ட சமயக் கோட்பாட்டுக்குள் இணைக்க முடியாது. ஆனால், நூல்களைப் பறைசாற்றுவதும், விளக்க உரையாற்றுவதும் வழிபாட்டின் மையம் அல்ல. சீன-யப்பானிய சமயங்களின் முதிர்ச்சி பெற்ற வடிவங்கள் - ஆட்சித் தலைநகரத்தில் உள்ள அரச சடங்கிலிருந்து கோவிலில் நிகழும் பொதுமக்கள் சடங்குகள் வரை - எங்கும் சடங்கைச் சுட்டிக்காட்டும் அமைப்பு அடையாளங்களை முன்வைக்கின்றன.

# ரீட்டா டோவ் - அமெரிக்கக் கவிதை உலகின் தாரகை

**மேனகா நரேஷ்**,
*நியூஜெர்சி.*



*ரீட்டா பிரான்சஸ் டோவ் என்பவர், ஆகஸ்ட்டு 28, 1952 இல் ஒஹையோவில் உள்ள அக்ரோனில் பிறந்தார். இவர் அமெரிக்கக் கறுப்பினக் கவிஞரும் எழுத்தாளரும் ஆவார். இவர் 1973 இல் ஒஹையோவின் மியாமி பல்கலைக்கழகத்தில் ஆங்கிலத்தில் பி.ஏ. பட்டம் பெற்றார். பின்னர் ஜெர்மன் கவிதைகள் குறித்த மேற்படிப்பை ஜெர்மனியில் உள்ள ஒரு பல்கலைக்கழகத்தில் படித்தார். அயோவா பல்கலைக்கழகத்தில் படைப்பு எழுத்தில் எம்.எஃப்.ஏ. என்ற பட்டத்தைப் பெற்றார்.*

*1993 முதல் 1995 வரை, இவர் லைப்ரரி ஆஃப் காங்கிரஸில் கவிதைகளுக்கான ஆலோசகராகப் பணியாற்றினார். 1986 இல் காங்கிரஸின் சட்டத்தால் இந்தப் பதவி உருவாக்கப்பட்ட பின்னர் நியமிக்கப்பட்ட முதல் ஆப்பிரிக்க அமெரிக்கர் இவர் ஆவார். 1999 முதல் 2000 வரையிலான காங்கிரஸின் இருநூறாவது ஆண்டுக்கான "கவிதைக்கான சிறப்பு ஆலோசகராக" டோவ் நியமனம் பெற்றார். மேலும் இவர் 2004 முதல் 2006 வரை "வர்ஜீனியாவின் கவிஞர்" என்ற சிறப்புப் பதவி வகித்தார். 1989 முதல், அவர் சார்லட்டஸ்வில்லில் உள்ள வர்ஜீனியா பல்கலைக்கழகத்தில் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார்.*

*இவர் எழுதத் தேர்ந்தெடுத்த பலதரப்பட்ட தலைப்புகள் மற்றும் சிக்கலான உணர்ச்சிகளைக் கைப்பற்றும் துல்லியமான கவிதை, மொழி ஆகியவை எளிதில் இவர் எழுத்தை வகைப்படுத்துவதைச் சிக்கலாக்குகின்றது. ரீட்டா டோவ் தனது கவிதைத் தொகுப்பான "தி யெல்லோ ஹவுஸ் ஆன் தி கார்னர்" மூலம் 1980 இல் இலக்கிய உலகிற்கு அறிமுகமானார். இந்தப் புத்தகம் டோவின் தனித்துவமான எழுத்து நடையை உலகிற்கு அறிமுகப்படுத்தியது. 1986 ஆம் ஆண்டு கார்னகி - மெலன் யுனிவர்சிட்டி பதிப்பகம் மூலம் வெளியிடப்பட்ட அவரது மிகவும் பிரபலமான படைப்பு "தாமஸ் அண்ட் பியூலா", அவரது தாய்வழி தாத்தா பாட்டியின் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்ட கவிதைகளின் தொகுப்பாகும். இதற்காக இவர் 1987 இல் புலிட்சர் பரிசைப் பெற்றார். டோவ் பதினொரு கவிதைத் தொகுதிகளை வெளியிட்டுள்ளார். ஒரு சிறுகதைத் தொகுப்பு (பிஃப்த் சன்டே, 1985), ஒரு கட்டுரைத் தொகுப்பு (எ பொயட்ஸ் வேர்ல்ட், 1995), மற்றும் ஒரு நாவல் (த்ரூ தி ஐவரி கேட்,1992). அவரது*

சேகரிக்கப்பட்ட கவிதைகள் 2016 இல் , அமெரிக்கப் பதிப்பகமான டபிள்யூ. டபிள்யூ. நார்டனால் வெளியிடப்பட்டது. இதே பதிப்பகம் வெளியிட்ட டோவ்வின் 11வது கவிதைத் தொகுப்பு, பிளேலிஸ்ட் ஃபார் தி அபோகாலிப்ஸ், ஆகஸ்ட் 2021 இல் வாசகர்கள் மத்தியில் பெரும் வரவேற்பைப் பெற்றது. நியூயார்க் டைம்ஸ் விமர்சகர் டுவைட் கார்னர் இந்தத் தொகுப்பை "அவரது படைப்புகளில் சிறந்தவற்றில் ஒன்றாக", "நுணுக்கமான, நகைச்சுவையான மற்றும் துணிச்சலான கவிதைகளை உள்ளடக்கிய தொகுப்பு" என்று அழைத்தார்.




டோவ்வின் மிகவும் புகழ்பெற்ற கவிதைத் தொகுப்பு, சொனாட்டா முலாட்டிகா, 2009 இல் வெளியிடப்பட்டு, 2010 ஹர்ஸ்டன்-ரைட் மரபு விருதைப் பெற்றது. சொனாட்டா முலாட்டிகா என்பது பத்தொன்பதாம் நூற்றாண்டு, இருவேறு இனத்தைச் சேர்ந்த வயலின் கலைஞர் ஜார்ஜ் போல்க்ரீன் பிரிட்ஜ்டவரின் வாழ்க்கை மற்றும் லுட்விக் வான் பீத்தோவனுடனான அவரது நட்பைக் குறித்த கவிதை நூல் ஆகும்.

டோவ்வின் படைப்புகள் வரலாற்று மற்றும் அரசியல் நிகழ்வுகளின் மீது அவர் தன் பார்வையைப்  படரவிடுவதன் மூலம் தனித்துவம் வாய்ந்தவையாக

*இருக்கின்றன. அமெரிக்கன் ஸ்மூத்தில், பால்ரூம் நடனம் தொடர்பான தனது அனுபவங்களைப் பகிர்ந்துகொள்கிறார் டோவ். விமர்சகர் எமிலி நஸ்பாம், "டோவுக்கு நடனம் என்பது கவிதைக்கு இணையான ஒன்று. ஒவ்வொரு அசைவும் வரம்புகளுக்குள் நிகழ்த்தப்படும் கருணையின் வெளிப்பாடு; ஒவ்வொரு கலையும் வரலாற்றால் எடைபோடப்பட்டு முற்றிலும் புதிய ஒன்றை உருவாக்கும் அளவுக்கு இணக்கமானவை'', என்று குறிப்பிடுகிறார்.*

*டோவ்வின் கவிதைத் தொகுப்பான "சேகரிக்கப்பட்ட கவிதைகள்: 1974-2004" இல் உணவு தரும் ஆறுதல்களில் சாய்ந்துள்ள இவரது கவிதை வரிகளைக் காணலாம். வறுத்த மீன் மற்றும் வேக வைக்கப்பட்ட மக்காச்சோள நொய், மார்டினி (ஒருவகை மதுபானம்)மற்றும் பியர், கேவியார் (உப்பிட்டு உலர்த்திய உயர்தர உணவு மீன்வகையின் கருச்சினை) மற்றும் புளிப்பு ஹெர்ரிங் (ஒரு வகையான மீன்) ஆகிய உணவு வகைகள் இவரது கவிதை வரிகளில் இடம்பெற்றிருக்கின்றன. ஒரு கவிதையில்,*
*காலை உணவு மேசையில் அமர்ந்து உண்ணும் முன்பு,*
*"நீ என்னுடையவன்,*
*நான் அதை சாப்பிடுவதற்கு முன்*
*இரண்டு முறை முக்கி எடுக்கப்பட்ட வறுத்தெடுக்கப்பட்ட சிறிய கேக்கிடம் சொல்கிறேன்'' , என்று எழுதியிருக்கிறார்.*

*இன்னொரு கவிதையில்;*
*''சூரிய ஒளியில் எழுவது எவ்வளவு நல்லது!*
*பிஸ்கெட்டின் ஊதாரித்தனமான வாசனையில் -*
*கிரில் மீது முட்டை மற்றும் தொத்திறைச்சியின் வாசனை*
*நீ எழுத முழு வானமும் உன்னுடையது*
*திறந்த ஒரு வெற்றுப் பக்கம்*
*வா, ஒரு காலை அசை!*
*உனக்கு எப்போதும் தெரியப்போவதில்லை*
*யார் அந்த முட்டைகளைக் கீழே வறுக்கிறார்கள் என்று*
*நீ எழுந்து பார்க்கவில்லை என்றால்....,''  என்று எழுதியிருக்கிறார்.*

*காலையில் எழுந்திருப்பது கடினமாக இருக்கும் நாட்களில், டோவ் காலை உணவைப் பற்றிக் குறிப்பிடுகிறார். இந்த நாளின் முதல் மற்றும் மிகவும் நிறைவான உணவின் மூலம், வாசகரை விழித்தெழுந்து அச்சமின்றி அன்றைய தினத்தை எதிர் கொள்ளுமாறு அறிவுறுத்துகிறார். உணவு எவ்வாறு ஒரு புதிய தொடக்கத்தை, ஒரு புதிய நாளை நமக்குப் பரிசளித்து, நம்பிக்கையையும்,*

*சாத்தியக்கூறுகளையும் அளிக்கும் என்பதை இந்தக் கவிதை நமக்கு நினைவூட்டுகிறது.*



*1937 ஆம் ஆண்டு டொமினிகன் குடியரசில் நடந்த ஒரு வெகுஜனக் கொலையின் உண்மைக் கதையை அடிப்படையாகக் கொண்டது 'பார்ஸ்லி' என்ற இவரது கவிதை. "எல் ஜெனரல்" என்று குறிப்பிடப்படும் ரஃபேல் ட்ருஜிலோ, ஹைட்டி நாட்டின் இராணுவ சர்வாதிகாரியாக இருந்தான். ஸ்பானிஷ் மொழியில் "பார்ஸ்லி", "பெரெஜில்" என்ற வார்த்தையை உச்சரிக்க முடியாத அனைவரையும் கொலை செய்ய உத்தரவிட்டான். ஹெய்டியன் கிரியோலை தாய் மொழியாகக் கொண்டவர்கள் "பெரெஜில்" என்ற வார்த்தையைச் சரியான உச்சரிப்புடன் சொல்வதற்குச் சிரமப்பட்டார்கள். "r" என்ற எழுத்தைச் சரியாகச் சொல்ல முடியாத ஹைட்டிய உச்சரிப்பு கொண்டவர்கள் கொல்லப்பட்டனர். கறுப்பின ஹைட்டியர்கள் மீது ட்ருஜிலோ கொண்ட இனவெறியின் காரணமாக ஈவு இரக்கமின்றிக் கொல்லப்பட்டனர்! டோவ் 1983 இல் 'பார்ஸ்லி'யை வெளியிட்டார், இன்றுவரை அது அவரது சிறந்த படைப்புகளில் ஒன்றாக உள்ளது.*

*இந்தக் கவிதையிலிருந்து சில வரிகள்;*
*''எல் ஜெனரல் அவரது வார்த்தையைக் கண்டுபிடித்தார்: பெரெஜில்.*
*யார் அதைச் சரியாகச் சொல்கிறார்களோ, வாழ்கிறார்கள்*
*அவர் சிரிக்கிறார், சதுப்பு நிலத்திலிருந்து பற்கள் பிரகாசிக்கின்றன*
*காற்று மற்றும் நீரோட்டத்தால் தாக்கப்பட்ட*
*கரும்பு தோன்றுகிறது எங்கள் கனவுகளில்,*
*நாங்கள் படுத்துக் கொள்கிறோம்.*
*எங்கள் ஒவ்வொரு சொட்டு இரத்தத்திற்கும்*
*வசந்தத்தைப் பின்பற்றும் ஒரு கிளி உள்ளது*
*சதுப்பு நிலத்திலிருந்து கரும்பு தோன்றுகிறது.''*

*எல் ஜெனரல் அவனது தாயின் மரணத்தைத் தொடர்ந்து தன் துக்கத்தை நீக்கும் ஒரே விஷயம் மற்றவர்களின் துக்கம் மட்டுமே என்று நினைக்கிறான். மேலும் அவனது தாயாரின் இழப்பை எவ்வாறு சமாளிப்பது என்று தெரியாமல், ஆயிரக்கணக்கான மக்களைக் கொல்ல உத்தரவிடுகிறான். ஒரு வார்த்தையைத் தவறாக உச்சரித்ததனால் சுமார் 20,000 ஹைட்டியர்கள் கொல்லப்பட்டனர் என்ற செய்தி ட்ரூஜிலோவை ஒரு பயங்கரவாதியாகவும், மனித குலத்தின் எதிரியாகவும் சித்தரிக்கிறது. இந்தக் கருத்துக்களை உள்ளடக்கி, 'பார்ஸ்லி' துயரம், வன்முறை மற்றும் பயம் ஆகிய கருப்பொருள்களால் புனையப்பட்ட வலிமையான கவிதையாகத் திகழ்கிறது.*

*ரீட்டா டோவ் சிவில் உரிமை ஆர்வலர்களுக்காக அர்ப்பணித்த பல படைப்புகளில் 'ரோசா'வும் ஒன்று. இந்தக் கவிதை கறுப்பினச் சிவில் உரிமைப் போராளியான ரோசா பார்க்ஸ் பற்றியது. ஐம்பதுகளின் நடுவில் அமெரிக்காவில் நிலவிய பிரிவினைப் பற்றிய பல குறிப்புகளை இக்கவிதை கொண்டுள்ளது. 1955 ஆம் ஆண்டு, டிசம்பர் ஒன்றாம் தேதி, ரோசா பார்க்ஸ் ஒரு பேருந்தின் முன் இருக்கையில் அமர்ந்துகொண்டு ஒரு வெள்ளைப் பயணிக்குத் தனது இருக்கையை கொடுக்க மறுத்துவிட்டார். இதன் விளைவாக அவர் கைது செய்யப்பட்டார். இந்த நிகழ்வு சிவில் உரிமைகள் இயக்கத்தின் வரையறுக்கப்பட்ட தருணங்களில் ஒன்றாக அறியப்படுகிறது.*

*“ரோசா“*
*அவள் எப்படி அங்கே அமர்ந்தாள்,*
*சரியான நேரத்தில் அந்த இடத்தில்*
*மிகவும் தவறாக இருந்தாலும் அது தயாராக இருந்தது .*

*நச்சென்ற பெயருடன்*
*ஒரு இருக்கையில் சற்றே ஓய்வெடுக்கும்*
*கனவைச் சுமந்து*
*அவளுடைய விவேகமான கோட்.*

*ஒன்றும் செய்யாமல் இருந்ததே அவள் செயல்,*
*அவள் பார்வையின் பரிசுத்தமான சுடர்*
*கேமரா வெளிச்சத்தில் செதுக்கப்பட்டது.*

*அவள் எப்படி எழுந்து நின்றாள்*
*அவர்கள் அவளது கைப்பையை மீட்க*
*கீழே குனிந்த போது.*
*அந்த மரியாதை.*

*பார்க்ஸ் இறுதியாக அவர் கைது செய்யப்பட்டபோது "எழுந்து நின்றார்". அவர் பிரிவினை நடைமுறைகளுக்கு எதிராகவே எழுந்து நின்றார் என்பது புலப்படுகிறது. இந்த நிகழ்வு சிவில் உரிமைகள் இயக்கத்தைத் தூண்டிய ஒரு வரலாற்றுச் சிறப்புமிக்க தருணமாகும். இப்பெண்மணியின் மனவலிமைக்குப் புகழாரம் சூட்டும் விதமாகவே இந்தக் கவிதையை டோவ் எழுதியிருக்கிறார்.*

*ரீட்டா டோவ் எழுதிய 'டேஸ்டார்' பகலில் ஒரு தாய் தனக்கென செலவழிக்கும் அமைதியான நேரத்தை விவரிக்கிறது.*



*இந்தக் கவிதையின் வரிகள் ஒரு பெண்ணின் விருப்பமான நேரத்தைச் சுற்றியுள்ள தருணங்களை வாசகருக்கு எடுத்துச் சொல்கிறது. இது அவளுக்கு மகிழ்ச்சியைத் தரக்கூடிய ஒன்றல்ல. அவளுடைய குழந்தைகள் தூங்கும்போது, அவள் மௌனமாக ஒன்றும் செய்யவேண்டிய அவசியம் இல்லாமல் தன் விருப்பத்திற்கேற்ப செலவழிக்கும் நேரம் அது. ஒரு நாளின் மற்ற நேரங்களில் தன் குழந்தைகளுடனும் கணவனுடனும் பழகும்போது அவளுக்குத் தேவையான வலிமையை இந்த அமைதியான நேரம் அவளுக்குக் கொடுக்கிறது.*

*"டே ஸ்டார்" ( பகல் நட்சத்திரம்)*
*அவள் சிந்திக்கச் சிறிது நேரம் வேண்டும்*
*ஆனால் அவள் குழந்தையின் டயப்பர்களை கண்டாள்,*
*ஒரு பொம்மைக் கதவுக்கு பின்னால் சரிந்திருந்தது,*
*எனவே அவள் வீட்டிற்குப் பின்னால் ஒரு நாற்காலியை இழுத்தாள்*
*குழந்தைகள் தூங்கும் சமயம் வெளியே உட்கார*
*அந்த நேரங்களில் பார்க்க வேண்டிய விஷயங்கள் இருந்தன -*
*மறைந்து போன கிரிக்கெட் பூச்சி உதிர்த்த கவசம்,*
*ஒரு மிதக்கும் மேப்பில் இலை.*
*மற்ற நாட்களில் அவள் கண்களை மூடி*
*அவளின் தெளிவான இரத்த ஓட்டத்தை மட்டும் பார்க்கும்வரை வெறித்துப் பார்ப்பாள்*
*லிசா தூக்கம் கலைந்து எழுவதற்கு முன்பு அவளுக்கு ஒரு மணிநேரம் இருந்தது*

*அவள் படிக்கட்டுகளின் மேலிருந்து வாயைக் குவித்து*
*அம்மா என்ன செய்து கொண்டிருந்தாள்*
*பின்கட்டில் வயல் எலிகளுடன்? என்று யோசிப்பதற்கு முன்...*

*தாயின் பொறுப்புகள், பெண் வாழ்க்கை, வீட்டு வேலைகள் ஆகியவை இக்கவிதையின் மூன்று முக்கிய கருப்பொருள்கள். எப்பொழுதும் குழந்தைகளைப் பராமரிப்பதில் மும்முரமாக இருக்கும் ஒரு பெண்ணைக் கவிஞர் இக்கவிதையில் முன்வைக்கிறார். உண்மையில், வீட்டு வேலைகள் தாய்மார்களின் ஆற்றலைக் குறைத்தாலும், தாய்மை இதையெல்லாம் பொருட்படுத்தாமல், தங்கள் பணிகளைச் செய்துகொண்டே இருக்கப் பெண்களுக்கு உத்வேகம் அளிக்கிறது. அதனால்தான் தாய்மார்கள் தங்கள் தனித்துவத்தைக் குடும்ப பராமரிப்புக்காகவே இழக்கத் தயங்குவதில்லை.*

*புலிட்சர் பரிசு தவிர, ரீட்டா டோவ் பல இலக்கிய மற்றும் கல்வி கௌரவங்களைப் பெற்றுள்ளார், அவற்றில் 29 கௌரவ டாக்டர் பட்டங்கள் என்பது குறிப்பிடத்தகுந்தது. வர்ஜீனியா நூலகம் மற்றும் ஃபுல்பிரைட் சங்கத்தின் வாழ்நாள் சாதனைப் பதக்கங்கள், 2014 கரோல் வெய்ன்ஸ்டீன் கவிதைப் பரிசு, அமெரிக்கக் கவிஞர்கள் அகாடமியின் 2019 வாலஸ் ஸ்டீவன்ஸ் விருது மற்றும் அமெரிக்கன் அகாடமி ஆஃப் ஆர்ட்ஸ் அண்ட் லெட்டர்ஸ் வழங்கிய 2021 ஆம் ஆண்டுக்கான அமெரிக்கக் கவிஞர்களுக்கான தங்கப் பதக்கம் ஆகியவை டோவுக்கு வழங்கப்பட்ட முக்கியமான விருதுகள். 1996 இல், அவர் ஜனாதிபதி பில் கிளிண்டனிடமிருந்து தேசிய மனிதநேயப் பதக்கத்தையும், 2011 இல், ஜனாதிபதி பராக் ஒபாமாவிடமிருந்து தேசிய கலைப் பதக்கத்தையும் பெற்றார்—இரண்டு பதக்கங்களையும் பெற்ற ஒரே கவிஞர் டோவ். 2022 ஆம் ஆண்டில், கவிதைக்கான வாழ்நாள் சாதனை விருதான ரெபெக்கா ஜான்சன் பாபிட் தேசியப் பரிசை வென்றார்.*

*ரீட்டா டோவ்வின் எழுத்து நடை தனித்துவமானது. அமெரிக்க அரசியல் நிலப்பரப்பில் ஆப்பிரிக்க அமெரிக்கர்களின் அனுபவங்களைச் சித்தரிக்க டோவ் துடிப்புடன் எழுதுகிறார். மேலும் உணர்ச்சிகரமான உருவகங்களையும் சில பிரத்யேகக் குறியீடுகளையும் பயன்படுத்துகிறார். இவரது பெரும்பாலான கவிதைகளில், பெண்கள், கறுப்பினத்தவர், தொழிலாள வர்க்க அமெரிக்கர்கள் என ஒடுக்கப்பட்டவர்களின் அனுபவங்களைப் பதிவு செய்கிறார். இருப்பினும், பாதிக்கப்பட்டவரின் கதறலாக இல்லாமல், அமைதியான நம்பிக்கையுடன் இவர் சமுதாய அடக்குமுறைகளுக்கு ஆளானவர்களுக்காகத் தன் கவிதைகளின் வழியே பேசுகிறார்... இன்னும் பேசுவார்!*

# இராவண காவியத்தின் காவியச்சுவை பகுதி - 3

***கவிஞர் கனிமொழி,***
***வழக்கறிஞர், வெர்ஜினியா***



*தமிழ் மொழியும் அந்த மொழி பேசும் மக்களும் உலகத்தின் மூத்த குடிகள் என்பதைத் தெரியப்படுத்தத் தாய்மொழிப் படலத்தில் எழுசீர் விருத்தத்தில் புலவர் குழந்தை எழுதிய வரிகள்:*

*பரிதியி லிருந்து சிதறிய வுலகப்*
*பகுதியில் முதலினிற் குளிர்ந்து*
*பெரிதுயிர் வகைகள் முதன்முதல் தோன்றப்*
*பெற்றது பழந்தமி ழகமே;*

*வருதமி ழகத்து மக்களே யுலக*
*மக்களுக் கொருமுதல் மக்கள்*
*தருமுதல் மக்கள் பேசிய மொழிசெந்*
*தமிழெனில் இதற்கிணை யெதுவோ.*

*பகலவனிடமிருந்து வெடித்துச் சிதறிய ஒரு துண்டுப் பகுதியாகிய நாம் வாழும் உலகத்தில், வெப்பம் குறைந்து நிலபரப்புக் குளிர்ந்துப் பெரிதாகிய உயிர் வகைகள் முதன் முதலாகத் தோன்றப் பெற்றச் சிறப்புடையது நம் பழந்தமிழ் பகுதி, அந்தப் பகுதியில் தோன்றிய மக்களின் மொழியே உலகின் முதன்மை மொழி. இந்தப் பாடலில் மோனை சிறப்புப் பெற்று வருவதைக் காண முடியும்.*

*இசைத் தமிழைத் தமிழர்கள் வளர்த்த பாங்கினையும் அன்றைய தமிழர்கள் பயன்படுத்தியக் கருவிகளையும் இராவண காவியம் செப்புகிறது.*

*மண்ணுமுழ வோடுகுழல் நண்ணுமிசை யாழின்*
*எண்ணொடு கலந்திலகு மேழிசை பொருந்தப்*
*பண்ணொடு திறந்தெரிபு பாடுமவர் கொள்ள*
*எண்ணிய கொடுத்துய ரிசைத்தமிழ் வளர்த்தார்.*

*சீர் செய்யப்பட்ட முழவு என்னும் மத்தளம், குழலிசைக் கருவிகள் யாழின் நரம்பின் ஓசையளவு கலந்து விளங்கும் குரல், துத்தம் , கைக்கிளை, விளரி,*

தாரம், இளி, உழை ஆகிய ஏழிசையும் பொருந்திட பண், திறம் இவற்றின் வகைத் தெரிந்திடப் பாடும் பாணர்கள் பெற்றுக் கொள்ள அவர்கள் விரும்பியவற்றைப் பரிசில் ஆகத் தந்து மக்கள் இசைத் தமிழை வளர்த்தனர் என்கிறது பாடல். இந்தப் பாடலில் எதுகை சிறப்பாக ஒன்றி வருவதைப்



பார்க்கலாம்.

தமிழ்ப் புலவர்கள் தமிழை வளர்த்திடும் காரணத்தால் தமிழ் அரசர்கள் அவர்களுக்கு பொன்முடி சூட்டி மகிழ்வர் என்பதைக் கீழ்க்கண்ட பாடலில் அறியலாம்.

வாய்மொழி பொதிந்திடுசொன் மாலைபல வேய்ந்து
தாய்மொழி வளர்த்திடு தமிழ்ப்புலவர் தம்மை
ஆய்மொழி புனைந்தில கரியணை யிருத்திப்
போய்மொழி பெறாதிலகு பொன்முடி புனைவார்.

இந்தப் பாடலில் எதுகையும் மோனையும் குறிப்பாக அடிகளின் முதல் மற்றும் மூன்றாம் சீரில் சிறப்புடன் அமைந்திருப்பது ஓசை நயத்தைக் கூட்டும் எனின் மிகையல்ல,

தமிழ்க் கழகங்கள் அமைத்து தமிழ் நூல்களை இயற்றி பாண்டிய மன்னர் எவ்வாறு தமிழ் வளர்த்தனர் என்பதை, சிறப்பான ஓசை நயம் பொருந்தியப் பாடலின் மூலம் புலவர் குழந்தை விளக்குகிறார்.

கண்டவக் கழகமுன் கருத்தை யேற்றியே
வண்டமிழ் நூல்களை வரைய றுத்திடத்
தண்டமி ழகத்திடைத் தமிழின் வாழ்வுறும்

ஒண்டமிழ்ப் புலவரை யொருங்கு கூட்டினன்.

கண்ட, வண்ட, தண்ட, ஒண்ட என்று வரும் எதுகை, பாடலின் இனிமையைக் கூட்டும்.

அப்படிக் கழகங்கள் அமைத்துப் பணி செய்த அலுவலர்கள் புலவர்கள் அமைத்தப் பாக்களைத் தொகைத் தொகையாகத் தொகுத்து மக்களிடையே எடுத்துரைத்து தமிழைக் காத்தனர் என்பதை,

தகையுற வத்தமிழ்ச் சங்கந் தங்கினோர்
வகையுறப் புலவர்கள் வகுத்த பாக்களைத்
தொகையுறச் செய்துநூல் தொகுத்து மோதியும்
திகழுற வாய்ந்தநேர் செய்து வந்தனர்.



கடல் பல நேரங்களில் தமிழ் நிலத்தை விழுங்கியுள்ளது என நாம் அறிவோம். அப்படி விழுங்கிய நிலத்தில் தென்பாலி நாடும் ஒன்று என இராவண காவியம் கூறுகிறது. அந்தப் பெருவளம் பெற்ற நிலத்தைத் தீய கடல் விழுங்கியதைக் கீழ்க்கண்ட பாடலில் காணலாம்.

பொருவள மின்றியே புகல டைந்தெனப்
பெருவள மிக்கதன் பெயரின் மேம்படும்
ஒருவள நாட்டினை யுண்டு வந்திடத்

*திருவுளங் கொண்டதத் தீய வாழியும்.*

*ஒவ்வொரு அடியிலும் மோனை, முதல் மற்றும் மூன்றாம் சீரில் ஒன்றி வந்துள்ளதைக் காணலாம். எதுகை 'ரு' எனும் எழுத்தில் நான்கு அடிகளிலும் அமைந்திருப்பதையும் காணலாம்.*

*'அ' என ஒலிக்கப்படும்போது முக்கனியாகிய மா, பலா, வாழை, தேன், பால் இவற்றைவிட சுவையானதாகத் தமிழ்மொழி செவிகளில் கேட்டிடும். எனவே தமிழ் மொழியை விரும்பாதவர் யாரும் இருக்க முடியுமோ? என்று வினா தொடுக்கின்றார் புலவர்.*

*அஎன வாயங் காக்கின் அன்னையுன் புலனா றைந்தும்*
*முக்கனி தேன்பால் கண்டும் முகஞ்சுழித் தினைந்தே யொல்கப்*
*புக்கெழீ யியல்பா யின்பம் புல்குசெந் தமிழ்நீ யானால்*
*அக்கறை யொடுநின் நச்சார் யாரினி தறைவா யம்மா.*




*உணவை விட உயிரான தாய்மொழி இனியது என்பதைச் சுவைபட விளக்கியிருப்பதைக் காணலாம். உணவு தமிழரை வளர்த்திடும். ஆனால் உயிரையும் உணர்வையும் வளர்ப்பது தமிழே என்ற புரட்சிக் கவிஞரின் பாடலை இங்குப் பொருத்திப் பார்க்கலாம்.*

- தொடரும்

*தொடர் : 8*

# *எளிய முறையில் யாப்பறிவோம்!*
# *தொடை*



**நெருப்பலையார் இராம. இளங்கோவன்,**
*பொருளாளர்,*
*பெங்களூரு தமிழ்ச் சங்கம்*

*பாவலர்காள்! இதுவரை நாம் எழுத்து, அசை, சீர், தளை, அடி வரை கற்றுணர்ந்தோம்; பயிற்சியும் எடுத்தோம். இல்லையா? இதனால், நாம் அடுத்துத் தொடை என்ற பாடத்தைப் பயில உள்ளோம். அல்லவா? அப்படியெனில் பாடத்திற்குள் நுழைவோமா? ஆவலோடு இருக்கின்றீர்கள்தானே! மிக்க மகிழ்ச்சி. வாருங்கள்!*

*மோனைத் தொடை:*
*அடிகளிலும் சீர்களிலும் எழுத்து முதலியவை ஒன்றி வருமாறு பாடலைத் தொடுக்கப் படுவதே தொடையாகும். இது……..*
*மோனைத் தொடை,*
*எதுகைத் தொடை,*
*முரண் தொடை,*
*இயைபுத் தொடை,*
*அளபெடைத் தொடை,*
*என்று ஐந்தாகும். இவற்றுடன்,*
*அந்தாதித் தொடை,*
*இரட்டைத் தொடை,*
*செந்தொடை,*

*போன்ற தொடைகளும் உள்ளன. இவற்றில் முதலில் நாம் மோனைத் தொடை பற்றியும், எதுகைத் தொடை பற்றியும் விரிவாக அறிவோம். பாடலுக்கு முக்கியமாகப் பயன்படுபவை இவையே! மோனையும் எதுகையும் இல்லாமல் இன்னோசை, பாடலில் இழைந்து இனிக்காது என்பதை உணர்க.*
*ஏழிசைகளையும் கட்டுப்படுத்தி இசைக் கருவிகளில் இன்னிசைப் பிறக்கிறது என்பதை இசை ஞானத்துடன் உணர்ந்து அறிய முயல்க.*

*இசை அடிப்படையில்தான் தெருவில் பொருள் விற்பவர்கள் கூட கூவுகிறார்கள் என்பதைச் சிந்தையில் கொள்ளுங்கள். கிராமத்துப் பேச்சு வழக்கில் கூட எகன மொகன தெரியாம பேசாதே என்பார்கள். எகன என்றால் எதுகை; மொகன*

என்றால் மோனை என்று பொருள். ஆக, எழுத்தறிவில்லாத யாப்போ, இலக்கணமோ தெரியாத பாமரர் கூட ஓசை நயம் கருதியே தன்னை அறியாமல் உள்ளுணர்வோடு பேச்சிலும் ஓசை நயத்துடன் பேசுவதை நீங்களும் கண்டிருப்பீர்! நீங்களும் பேசி இருப்பீர்! இல்லையா?

சிலர்.... பரவாயில்லையே நீ கூட மோனை நயத்தோடு பேசுறியே? என்பர். கற்றறியா மங்கையர்களெல்லாம் நாட்டுப்புறவியலில் அடங்கும் தாலாட்டு, ஒப்பாரி, கும்மி பாடியாடுவதை அறிந்திருப்பீர்! அப்பாடல்களில் தன்னையறியாமலே எதுகை மோனை அமைந்திருக்கும். பழமொழிகளிலும் மோனை அமையும்படியே சொல்லப் பட்டிருக்கின்றன.

"மாதா ஊட்டாத சோற்றை மாங்காய் ஊட்டும்.

என்ற பழமொழியில் கூட மா- மா என்று மோனையாக முதல் (சீர்) சொல்லிலும் நான்காம் ( சீர்) சொல்லிலும் வந்திருத்தலை உற்று நோக்குங்கள்.

அப்படியிருக்கக் கற்றறிந்த நமக்கு இயலாதா என்ன? ஆக, எதுகை மோனை எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தது என்பதை உணருங்கள். மோனை நடந்தால் பாக்களில் (கவிதைகளில்) மலையும் நடக்கும் அல்லவா? இனி மோனையைப் பற்றி அறிய முயல்வோம்.

**மோனை:**

மோனை, சீர் மோனை, அடி மோனை என்று இரண்டு வகைப்படும். மோனை என்ற சொல்லுக்கு முதல் என்பது பொருள். ஓர் அடியின் முதல் சீரான முதல் சொல்லுக்கு முதல் எழுத்தாக முந்தி வருவது மோனையாகும். அடிதோறும் முதலெழுத்து ஒன்றி ஓரெழுத்தாய் ஒத்து ஒன்றிலேனும் பலவற்றிலேனும் முதலெழுத்து ஒன்றி வருவது மோனைத் தொடையாகும். இதனை சீர் மோனை என்றும், வழிமோனை என்றும் கூறுவர். எடுத்துக் காட்டாக.........

"போகாத இடந்தனிலே போக வேண்டாம்!"

என்ற பா அடியில் முதல் சீரின் முதல் எழுத்து போ என்ற எழுத்தும், மூன்றாம் சீரின் முதல் எழுத்து போ என்ற எழுத்தும் சீர் மோனையாக வந்திருப்பதை ஒரு முறைக்குப் பலமுறை உற்று நோக்குங்கள். இனி அடி மோனை.......

**அடி மோனை:**

அடி தோறும் முதலெழுத்து ஒரே எழுத்தாய் வருவது, அடி மோனையாகும். இதற்கு எடுத்துக்காட்டாக ஒரு பாவினைப் பார்த்தால்தான் உங்களுக்கு விளங்கும். ஆகவே, பாவினைக் காண்போம்.

***பாடல்:***

*மாவும் புள்ளும் வதிவயின் படர*
*மாநீர் விரிந்த பூவும் கூம்ப*
*மாலை தொடுத்த கோதையும் கமழ*
*மாலை வந்த வாடை*
*மாயோள் இன்னுயிர் புறத்திறுத் தற்றே!*

*என்ற நேரிசை ஆசிரியப்பா எனும் இப்பாட்டில் ஒவ்வோரடியின் முதலெழுத்தும் மா என்ற நெடில் மோனையாக வந்திருத்தலைக் காண்க. இதேபோல், அடிதோறும் மேற்காணும் பாட்டில் வந்திருக்கும் (மா) போன்று மோனை வைத்துப் பாடுவது கடினம். ஆகவே இக்காலத்தில் பெரும்பான்மையாக யாரும் அடி மோனை வைத்துப் பாடுவது இல்லை. இருப்பினும், தெரிந்து வைத்துக் கொள்வதில் பிழையில்லையே!*




*அடி மோனை எழுத்தானது ஒரே எழுத்தாய் இருத்தல் மட்டுமல்ல; ஒத்த எழுத்தாகவும் இருத்தல் வேண்டும். அதாவது, குறிலெழுத்துக்குக் குறிலெழுத்தும், நெடிலெழுத்துக்கு நெடிலெழுத்தும் மோனையாக வருதல் வேண்டும். முன்னமே தாங்கள் குறில் நெடில் பற்றி அறிந்திருப்பதால் இங்குச் சுட்டிக் காட்ட வேண்டிய தேவை இல்லை என்று கருதுகிறேன். அடுத்து, சீர் மோனை பற்றி அறிவோம் வாருங்கள்.*

***சீர் மோனை:***

*ஓர் எழுத்துக்கு இணையான வேறு எழுத்துகளும் மோனையாக வரலாம். அவை என்னென்ன என்பதை அறிவோம்.*

*1) அ, ஆ, ஐ, ஔ இந்த உயிரெழுத்துகளில் ஓர் அடியில் வரும் சீர்களில் ஒன்றுக்கு ஒன்று மோனையாக வரலாம். ஔ என்னும் எழுத்தை மோனையாகக் கொண்டு*

*முதற் சீர் தொடங்கினால் அடுத்த மோனைக்கு ஔ என்ற சொல் கிடைக்கா விட்டால் அவ்வெழுத்துக்கு இணையாக மேலே உள்ள அ, ஆ, ஐ ஆகிய எழுத்துகளை மோனையாகப் பயன் படுத்தலாம். ஆனால், இ என்ற எழுத்தோ, அல்லது ஒ என்ற எழுத்தோ பிற எழுத்தோ வருதல் கூடாது.*

*எடுத்துக் காட்டாக ஒரு பாடல்:*

*ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்.*
*ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி.*
*ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்.*

*மேற்காணும் பாட்டில் முதலடியில் முதல் சீரின் முதலெழுத்தும், மூன்றாம் சீரின் முதலெழுத்தும் ஆ, அ என மோனை வந்துள்ளது. இரண்டாம் அடியில் முதல் சீரின் முதலெழுத்தும் மூன்றாம் சீரின் முதல் எழுத்தும் ஐ- ஆ. என மோனை வந்துள்ளது. மூன்றாம் அடியில் முதல் சீரின் முதல் எழுத்தும், மூன்றாம் சீரின் முதல் எழுத்தும் ஐ- - அ என மோனை வந்துள்ளது. ஆக, ஒரே இன எழுத்தாக மோனை வருதலை உணர்க. அடுத்து,*

# தமிழ்

*2) இ,ஈ,எ,ஏ என்ற இந் நான்கெழுத்தும் ஓரடியில் வரும் சீர்களுக்கு ஒன்றுக்கு ஒன்று மோனையாக வரலாம்.*

*எடுத்துக் காட்டாக பாடல் அடிகள்:*

*"இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ"*
*இதில் இ, இ, எ மோனை வந்துள்ளன.*

*"இருமை வகைதெரிந்(து) ஈண்டறம் பூண்டோர்."*
*இதில் இ- க்கு ஈ மோனை வந்துள்ளது.*

*"இருநாளைக்(கு) ஏலென்றால் ஏலாய்."*
*இதிலும் மூன்று சீரிலுமே இ, ஏ, ஏ என்று மோனை வந்திருத்தலை நோக்குங்கள்.*

"எமக்கென் யென்(று) இட்டுண்(டு) இரும்."
இதில் கூட எ, இ, இ என மூன்று சீரிலுமே மோனை வந்துள்ளன. அடுத்து………

உயிரெழுத்துக்களான இ, ஈ, எ, ஏ என்ற இவற்றுக்கு உயிர் மெய்யான யகர எழுத்து மோனையாக வந்துள்ளதை கீழுள்ள எடுத்துக் காட்டான பாடலைக் காண்க:

"எண்ணி ஒருகருமம் யார்க்கும்செய் யொன்னாதே!"
என்ற பாவில் எ என்ற உயிரெழுத்துக்கு ய என்ற யகர உயிர்மெய் பொருந்தி வந்திருத்தலை நோக்குக. அடுத்து….

"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்,
இனிதாவ(து) எங்கும் காணோம்."
என்னும் இப்பாவில் யா என்ற உயிர்மெய் எழுத்துக்கு, இ, எ என்னும் உயிரெழுத்துகள் மோனைகளாக வந்துள்ளன என்பதை அறிக.

3) உ, இ, ஒ, ஓ ஆகிய இந்த உயிரெழுத்துகள் ஓரடியில் வரும் சீர்களுக்கு ஒன்றிற்கு ஒன்று மோனையாக வரும்.

எடுத்துக் காட்டாக:
"ஒட்டி உறுவார் உறவு."
"ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்".
"உழுதுண்டு வாழ்வதற்(கு) ஒப்பில்லை கண்டீர்."
"ஒறுத்தாரை என்செயலாம் ஊரெலாம் ஒன்றா?"
மேலேயுள்ள நான்கு அடிகளிலும்……

ஒ - உ .
ஓ - ஓ - உ .
உ - ஒ .
ஒ - ஊ - ஒ .

இப்படி முதல் சீருக்கும் மூன்றாம் சீருக்கும் மோனையாக வந்துள்ள ஓரின எழுத்துகளைக் காண்க. மேலே குறிப்பிட்ட மோனை எழுத்துகள் பாட்டில் (கவிதையில்) பயன்படுத்த வேண்டுமெனில், மனப்பாடம் செய்து பயிற்சி எடுக்க வேண்டும்.

# சென்றிடுவீர் எட்டுத் திக்கும் - நூலாய்வு

*முனைவர் செ.இராஜேஸ்வரி அவர்களின் மெய் நிகர் கூட்ட ஆய்விருக்கையில் நிகழ்த்திய உரை – 29/-7/2023*



***டாக்டர் புதேரி தானப்பன்***
*தலைவர், திருக்குறள் பாராயணம், புது தில்லி.*
*தலைவர், தில்லித் தமிழ் வளர்ச்சிக் கழகம், புது தில்லி*
*பேசி: 93 13 03 03 33*

*முனைவர் செ. இராஜேஸ்வரி அம்மையார் அவர்கள் பல்துறை ஆர்வலர் என்பது எல்லோருக்கும் தெரியும்.*
*அவர் ஒரு,*
*தமிழ் எழுத்தாளர்*
*ஆங்கில எழுத்தாளர்*
*சிறுகதை எழுத்தாளர்*
*தமிழ் இதழாசிரியர்*
*ஆங்கில இதழாசிரியர்*
*கவிஞர்*
*கட்டுரையாளர்*
*நூல் பதிப்பாளர்*
*நூல் வெளியீட்டாளர்*
*பெண்ணிய உணர்வாளர்*
*மொழிபெயர்ப்பாளர்*
*சிறுதெய்வ ஆய்வாளர்*
*சொற்பொழிவாளர்*
*பன் மொழி வித்தகர்.*

*இப்படிப் பன்முகத்தன்மை கொண்ட பேராளராய் அம்மையார் மிளிர்கிறார்.*

*பல நூல்களை இவர் மொழிபெயர்ப்பு செய்துள்ளார். "சென்றிடுவீர் எட்டுத் திக்கும்" என்னும் நூல் இவருக்கு இன்னொரு மைல் கல்லாகும். இது இருபது ஆங்கிலக் கவிதைகளின் மொழிபெயர்ப்பைத் தமிழுக்குத் தருகிறது.*

*1) சர் பிலிப் சிட்னி*
*2) கிறிஸ்டினா ரோசெட்டி,*
*3) சாமுவேல் பெக்கெட்,*
*4) மாயா ஏஞ்சலோ*

*5) ஜான் டிரைடன் ,*
*6) தாமஸ் ஸ்டான்லி*
*7) பெர்ஸி ப்யஸிஸே ஷெல்லி,*
*8) ஆபிரகாம் கோவ்லி ,*
*9) ஜெநோஸ் சொக்கிட்ஸ்,*
*10) வில்லியம் வேர்ட்ஸ்வொர்த்*




*ஆகிய பத்து உலகளாவியக் கவிஞர்களின் கவிதைகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. மாயா ஏஞ்சலோ அவர்களது மட்டும் ஒன்பது கவிதைகள் இடம் பெற்றுள்ளன.*

*இந்நூலின் முதல் பகுதி 'காதல்' என்பது. இரண்டாம் பகுதி, 'இயற்கை' என்பது. மூன்றாம் பகுதி 'பெண்கள்' என்பது. இவ்வாறு மூன்று பகுதிகளாக இந் நூலில் உள்ள கவிதைகள் பகுக்கப்பட்டுள்ளன.*

*சர் பிலிப் சிட்னி என்பவரின் காதல் கவிதை முதற் கவிதையாகத் தொடங்குகிறது.*

*காதல் கொண்டவர்களின் இதயங்கள் இடம் மாறி, அவனது இதயம் அவளிடமும் அவளது இதயம் அவனிடமும் ஒன்றிவிடுகின்றன.*
*இதைத்தான்,*

*"நீயின்றி நானில்லை; நானின்றி நீயில்லை"*

*"நேற்றுமுதல் நீ யாரோ நான் யாரோ*
*இன்றுமுதல் நீ வேறோ நான் வேறோ"*

*"நான் பேச நினைப்பதெல்லாம் நீ பேச வேண்டும் "*

*போன்ற திரைப்படப் பாடல் வரிகள் தெரிவிக்கின்றன.*

*"என் அன்புக் காதலனிடம் என் இதயம் இருக்கிறது*


முனைவர் செ. இராஜேஸ்வரி

*என்னிடம் அவன் இதயம் இருக்கிறது*

*என்னுள் இருக்கும் அவனது இதயம்*
*என்னையும் அவனையும் ஒன்றாக்கிவிட்டது "*

*என்னும் கவிதை வரிகள்,*

*"நகமும் சதையும் போல "*
*"மலரும் மணமும் போல "*
*"வானும் நிலவும் போல "*
*"தமிழும் அதன் சுவையும் போல "*

*என்றெல்லாம் நமது முன்னோர்கள் மணமக்களை வாழ்த்துவது நினைவுக்கு வருகிறது.*

*கிறிஸ்டினா ரோசெட்டி என்பவரின் கவிதை, "கைக்குள் கை" என்று தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளது.*

*இவரது இந்தக் கவிதையின் கடைசி சில வரிகளைப் படிக்கும் எவரும் படிப்பதை நிறுத்திவிட்டு தனது இளமைக் காலத்தில் நிகழ்ந்ததை எண்ணி, கனவு உலகத்தில் நுழைந்து, தன்னை மறந்து எங்கோ வேறொரு உலகத்தில் சஞ்சரித்துக் கொண்டு இருப்பார்கள் என்பதை யாரும் அவ்வளவு எளிதாக மறுத்துவிட முடியாது.*

*"அற்பமானதாகத் தோன்றினாலும்*
*அதில் அதிக அர்த்தமிருக்கிறது*

*இப்போது அந்தத் தொடுதலை*
*அதிகமாக நினைக்கிறேன்*
*கைக்குள் கை வைத்த*
*அந்த முதல் தொடுதல்*

*வேறெவருக்கும் புரியாது "*
*என்று கவிஞன் பாடுவது எவ்வளவு யதார்த்தமான உண்மை பாருங்கள்!*

*"என் காதலி" என்னும் தலைப்பிலான கவிதையின் சில வரிகளைப் பாருங்கள்!*

*"என் நிழலில் அவள் கரைந்து போனாள்.*

*நான் சிரிக்கிறேன்*
*அழுகிறேன்*
*சிரிக்கிறேன்*

*சொல்ல எதுவுமற்ற சமயத்தில்*
*கொஞ்சம் பேசவும் செய்கிறேன் "*

*காதலில் தோய்ந்தவர்கள், தாங்கள் இருக்கும் இடத்தையே மறந்து ஒரு துறவியைப் போல தானாகச் சிரிப்பதும் தானாக அழுவதுமாக இருப்பார்கள் என்பதை இந்த வரிகள் மெய்ப்பிக்கின்றன.*

*காதலி அல்லது காதலன் எதிர்பாராத விதமாக வந்து சைகை மொழியால் அழைத்தால் அழைக்கப்பட்டவரின் காதல் மனம் பின்னோக்கிச் சென்று இன்ப வெள்ளத்தில் நீந்தித் திளைக்கும் என்று, "நீ வந்தபோது"என்னும் கவிதை வரிகள் கண்ணால் பேசிக் களவாடிய முத்தங்களின் ரகசியத்தைச் சொல்லுகின்றன.*

*"நான் அழைக்காமலேயே*
*நீ என்னிடம் வந்து*
*சைகையால்*
*என்னை அழைத்தபோது*

*அந்த நாட்களில்*
*சேர்த்து வைத்த*
*களவாடிய முத்தங்களின்*

*ரகசியச் சொற்களின் தொகுதி!"*

*என்பதுதான் அந்தக் கவிதை வரிகள்! இவை மனதைத தொட்டுச் செல்லும் அற்புதமான சொல்லோவியங்கள். மாயா ஏஞ்சலோவின் அனுபவமிக்க இந்த வரிகளை நெஞ்சம் நிறையப் பாராட்டலாம். இதனை நன்கு உணர்ந்து மொழிபெயர்ப்பு செய்த அம்மையாருக்கு இரட்டிப்புப் பாராட்டுகள்.*

*காதலுக்கு இருக்கும் துணிச்சல், ஒரு போர் வீரனுக்கு இருக்குமா என்பது ஐயமே. "தேவதையின் ஸ்பரிசம்" என்னும் மாயா ஏஞ்சலோவின் கவிதை*

இத்தகைய துணிச்சலைத் தருகிறது. காதல் துணிச்சல் மிக்கது; அது காதலர்களை விடுவிக்கிறது; காதலர்களை வாழ்விக்கிறது. இந்தத் துணிச்சலைப் போற்றிப் பாதுகாக்கும் போக்கில் அவருடைய கவிதை வரிகள் வீரியம் பேசுகின்றன என்பதை கவிதை வரிகளை சற்று முன் பின்னாக மாற்றிப் போட்டு வாசித்தால் தெரிந்து கொள்ளலாம்.

"காதல் தனது மிக உன்னதமான
கோயிலை விட்டுப் புறப்பட்டு
நம்மை வாழ்க்கைக்குள்
சுதந்திரமாக விடுவிக்கும்வரை

ஆனந்தத்தில் இருந்து
வெளியேறும் துணிச்சல்
நமக்குப் பழக்கம் இல்லை "

துணிச்சலைப் பற்றி இவ்வளவு துணிந்து எழுதும் கவிஞரின் துணிச்சலைப் பாராட்டியே தீரவேண்டும்.

"நாம் துணிச்சலோடு இருந்தால்
நம் ஆன்மாவிடமிருந்து
அச்சத்தின் பிடியை அகற்றிவிடும்"

"காதலின் ஒளி வெள்ளத்தில்
நாம் துணிச்சலுடன்
இருப்போம்"

இப்படி இக்கவிதையின் மூன்று இடங்களில் துணிச்சலைப் பற்றிக் கவிஞர் எடுத்துச் சொல்லுகிறார்.

மூல வரிகளை உருவாக்கிய கவிஞரின் மனதைத் தொட்டுப் பார்த்து அம்மையார் மொழிபெயர்ப்பு செய்தாரோ!

"வரம் ஒன்று பெறுவேன்" என்னும் ஜான் டிரைடனின் கவிதை, நெடுநல்வாடையைப் போல ஒரு நெடுங் கவிதை. ஆயின் இக் கவிதை, கவிதையாக இல்லாமல் டேஃப்னிஷ் என்ற ஓர் இளைஞனுக்கும் க்ளோரிஸ் என்ற ஒரு பெண்ணுக்கும் இடையே நடைபெறும் ஓர் உரையாடல் வடிவத்தில் உள்ளது. இது எப்படிக் கவிதையாகும் என்று எனக்குத் தெரியவில்லை.

டேஃப்னிஷ் மற்றும் க்ளோரிஸ் இருவரும் மனம் ஒன்றுபடாமலே உரையாடிக் கொண்டு கடைசியில் இணைந்து விடுகின்றனர்.

இந்த உரையாடலை அம்மையார் விருவிருப்பு குறையாமல் சரளமாகப் படிக்கும் வண்ணம் மொழிபெயர்த்துள்ளார். அவர் தனது மொழிபெயர்ப்பு அனுபவத்தைக் கொட்டி இதனைச் செய்துள்ளார் என்பதை நம்மால் புரிந்துகொள்ள முடிகிறது.

இயற்கைத் தாயின் மடியில் கோடிக்கணக்கான உயிரினங்கள் வாழ்கின்றன. அவற்றில் ஒன்று வெட்டுக்கிளி. இந்த வெட்டுக்கிளி என்னும் தலைப்பில் இரண்டு கவிதைகள் உள்ளன. ஒன்று, தாமஸ் ஸ்டான்லியின் கவிதை; மற்றொன்று, ஆபிரகாம் கோவ்லியின் கவிதை. இந்த இரண்டு கவிஞர்களும் பாடுவதை முனைவர் இராஜேஸ்வரி அம்மையாரின் எழுத்துக்களில் பார்ப்போம்.

அந்த வெட்டுக்கிளிகள்,

அதிகாலைப் பனித்துளியை அருந்துகின்றன;
மும்மடங்கு மகிழ்ச்சியில் திளைக்கின்றன;
நாள் முழுக்க சிக் சிக் என ஒலி எழுப்புகின்றன;
ஏதேனும் ஓர் இலை தழை மீது அமர்கின்றன;
ஒரு ராணியைப்போல் சிறகுகளை நிமிர்த்துகின்றன;
இவற்றை உழவன் மகிழ்ச்சியோடு அழைக்கின்றான்.
காரணம்,
அது எதையும் அழிக்காதாம்.
அதனால் அனைவரும் அவற்றை மதிக்கின்றனராம்.

நம்மில் சிலர் வெட்டுக்கிளியைக் கிராமங்களில் பார்த்திருக்கலாம். அவற்றை நாம் ஒருபோதும் ஒரு பொருட்டாகக் கருதுவதில்லை. ஆனால் கவிஞனின் பார்வை மாறுபட்டிருக்கிறது. அவற்றின் வாழ்க்கையையே கவிஞன் அலசிப் பார்க்கிறான். அந்தக் கவிஞரின் பார்வையை இன்னொரு கவிஞரால்தான் பார்க்க முடியும். அந்தப் பார்வையை உள் வாங்கி கவி மனம் கொண்ட இந்த அம்மையார் வாசகர்களுக்குத் தருகிறார். வாசகர்களாகிய நாம் கவிதையின் உள்ளே நுழைவதற்கு அம்மையாரின் மொழிபெயர்ப்பு பேருதவி புரிகிறது.

அந்த அழகான பாடலைப் பார்ப்போம்.

*"உன்னை அனைவரும் மதிக்கின்றனர்
வசந்தத்தின் தீர்க்கதரிசனம் நீ
தேவதைகள் உன் அழகில் மயங்குவர்
கடவுளரே உன்னை வந்து பார்த்து
உன் மகிழ்ச்சியான மனநிலையைப்
பெறத் துடிப்பர்."*

*மிக அருமையான மொழிபெயர்ப்பு!*

*ஷெல்லியின் "வானம்பாடி" என்னும் கவிதையின் சில வரிகளைப் பார்ப்போம்:*

*வானம்பாடிப் பறவை மிகவும் வேகமாகப் பறக்கக்கூடியது. இது மிகவும் உயரமாகப் பறக்கும்; அழகாகப் பாடும்; இது பாடினால் மழைவரும்; இப் பறவை மேகங்களிலிருந்து கீழே விழும் மழைத் துளியை விரும்பிக் குடிக்கும் என்றெல்லாம் கூறுவார்கள். அப்படிப்பட்ட பறவையைப் பற்றி இங்கே கவிஞர் என்ன பாடியுள்ளார் என்று பார்ப்போம்.*

*"நீ யாரென்று யாம் அறியோம்
உன்னைப்போல் வேறு யாருண்டு?
வானவில் மேகத்தில் இருந்து
பளிச்சென மழைத்துளி சிந்தவில்லை
நீ இருப்பதால் அங்கிருந்து
இசை மழையே பொழிகிறது."*

*இந்த விரிந்து பரந்து கிடக்கும் வான் வெளியில் ஏதேதோ பறவைகள் வந்து வந்து போகின்றன. அதனால், "நீ யாரென்று அறியோம்" என்று கவிஞர் அங்கலாய்க்கிறார். அதேநேரம், "உன்னைப்போல் வேறு யாருண்டு" என்றும் வியந்து பார்க்கிறார். இந்த வானம்பாடிப் பறவை மேகத்துக்கு அருகே இருப்பதால் மழைத்துளி சிந்தவில்லையாம். மாறாக, அங்கிருந்து இசை மழையே பொழிகிறதாம். இவ்வாறு கவிஞரின் வியப்பு நீண்டு கொண்டே போகிறது.*

*"நெருப்பு மேகம் போல "*

*"பகலின் வெட்ட வெளிச்சத்தில்
சொர்க்கத்தில் தோன்றும் நட்சத்திரம் போல "*

"அந்த வெள்ளிக் கோளத்தின்
அம்புகளைப் போல் "

"அரண்மனை உப்பரிகையில் உள்ள
உயர்குடிப் பெண்போல "

"பனித்துளியின் ஒளியில் ஜொலிக்கும்
பொன் வண்ணப் புழுப் போல "

"பசிய இலைகளால் சூழப்பட்ட
ரோஜா மலர் போல"

"ஸ்படிகத் தெளிவுடன் சிற்றோடை போல"



இப்படி இந்த நூல் முழுவதிலும் உவமைகள் கொட்டிக் கிடப்பதை நாம் பார்த்து வியந்து சலிப்பின்றி அம்மையாரைப் பாராட்டத் தோன்றுகிறது.

"வெட்டுக்கிளி" என்னும் தலைப்பில் ஏற்கெனவே ஒரு கவிதையைப் பார்த்தோம். அது தாமஸ் ஸ்டான்லி என்னும் கவிஞர் எழுதியது; இது ஆபிரகாம் கோவ்லி என்னும் கவிஞர் எழுதியது. கவிதையின் தொடக்கத்திலேயே,

"மகிழ்ச்சியான பூச்சி
உன் மகிழ்ச்சியை
யாரோடு எதனோடு ஒப்பிட முடியும் "

என்று கவிஞர் வியந்து பாடுகிறார்.

*"வெட்டுக்கிளி" யைப் பற்றிய ஆபிரகாம் கோவ்லியின் பார்வை தாமஸ் ஸ்டான்லியின் பார்வையிலிருந்து முற்றிலும் மாறுபட்டதாய் உள்ளது.*

*வெட்டுக்கிளியின் அழகையும் இயல்பையும் பார்த்துப் பார்த்து வியந்து பாடுகிறார் தாமஸ் ஸ்டான்லி. ஆனால், "இந்தப் பிரபஞ்சம் முழுவதும் உனக்கே சொந்தம்" என்று வியந்து பேசுகிறார் ஆபிரகாம் கோவ்லி!*

*"அதிகாலைப் பனித்துளியை*
*மதுவாக ருசிக்கிறது "*

*"உல்லாசமான மன்னவனைவிட*
*மகிழ்ச்சி நிரம்பியவன் நீ"*

*"அனைத்து கிரகங்களும் உன்னுடையவை"*

*"மனிதன் தனக்காக*
*உழுது விதைத்தாலும்*
*அவன் உழவன் மட்டுமே*
*நிலக்கிழார் நீயே "*

*"உன் ராஜ்ஜியத்தில்*
*மகிழ்ச்சி தாண்டவமாடும்"*

*"மகிழ்ச்சியான பூச்சி நீ"*

*"நீ காமரூபினி, மகா ஞானி*
*அனைத்து இன்பங்களையும்*
*இன்றே அனுபவிக்கத் துடிக்கும்*
*இன்ப மோகினி"*

*இப்படியெல்லாம் இந்த உலகத்தைச் சொந்தமாக்கிச் சுற்றித் திரியும் வெட்டுக்கிளியைப் பாடுகிறார் கவிஞர். இப் பாடலின் பொருண்மை கவிஞருக்குச் சொந்தமா? அன்றி கவிஞரின் பாடலை நாம் சுவைக்கும் வண்ணம் மொழிபெயர்ப்பு செய்து தந்த அம்மையாருக்குச் சொந்தமா? என்று முடிவு செய்வதை உங்களிடமே விட்டுவிடுகிறேன்.*

*வெட்டுக்கிளிகள் விவசாயிகளின் பயிர்களை நாசம் செய்துவிடும் என்பதால் நம் நாட்டு விவசாயிகள் அவற்றை விரும்புவதில்லை. ஆனால் அயல் நாடுகளில் இந்த நிலை தலைகீழாக உள்ளது.*

*வெட்டுக்கிளிகள் என்னும் தலைப்பில் உள்ள கவிதையில் விவசாயிகள் வெட்டுக்கிளிகளை வரவேற்கின்றனர்.*

*"அதிகாலைப் பனித்துளி அருந்தி*
*மும்மடங்கு மகிழ்ச்சியில் திளைத்து*
*நாள் முழுக்க சிக் சிக் என ஒலி எழுப்பி*
*ஏதேனும் ஓர் இலை தழை மீது அமர்ந்தபடி*
*ஒரு ராணியைப் போல சிறகுகளை நிமிர்த்தும்*
*உன்னை*
*உழவன் மகிழ்ச்சியோடு அழைப்பான்."*

*என்று கவிஞர் தாமஸ் ஸ்டான்லி பாடுகிறார். இந்தியாவில் வெட்டுக்கிளிகள் பயிர்களை நாசம் செய்து விடும் என்றால் மேலைநாட்டு வெட்டுக் கிளிகளும் அங்குள்ள பயிர்களை நாசம் செய்து விடும் அல்லவா? அப்படியானால் அங்குள்ள விவசாயிகள் வெட்டுக் கிளிகளை ஏன் வரவேற்றனர் என்னும் கேள்வியும் எழுகிறது.*

*"மகிழ்ச்சியான பூச்சி*
*உன் மகிழ்ச்சியை*
*யாரோடு எதனோடு ஒப்பிட முடியும்?"*

*என்று கேட்கிறார் கவிஞர் ஆபிரகாம் கோவ்லி.*

*ஆபிரஹாம் கோவ்லி யின் 'குடி' என்னும் கவிதை, இந்த அண்ட சாராசரத்தின் நடனப் பாங்கை எடுத்துச் சொல்லுகிறது.*

*கவிஞர் ஒரு அருமையான தத்துவத்தை எடுத்துச் சொல்லுகிறார். செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை ஆகியவற்றை சமண முனிவர்களால் பாடப்பட்ட நாலடியார் என்னும் நூல் எடுத்தியம்புகிறது. அது போலவே இக் கவிஞரும்,*

*வறண்டு கிடந்த இந்த பூமியில் மழை பெய்தது; மழை நீரை இந்த பூமியும் பருகியது; பூமியில் இருக்கும் செடி கொடிகளும் பருகின; பல்லுயிரும் பருகின;*

கடலும் பருகியது; எரியும் சூரியன் குடி மோகத்தில் முகம் சிவந்தான்; சூரியனும் சந்திரனும் நட்சத்திரங்களும் இரவு முழுவதும் கடல் நீரைக் குடித்துக் குடித்து நாட்டியமாடிப் பேரானந்தம் அடைந்தன.

இயற்கையில் நடைபெறும் சுழற்சியை தனது கவிதையில் கொண்டு வந்து நமக்குச் சுவைக்கக் கொடுத்த கவிஞருக்கும் அதனைச் சுவைபட மொழியாக்கம் செய்து தந்த இராஜேஸ்வரி அம்மையாருக்கும் பாராட்டுகள்.

"காதலின் பாலைவனம்" என்று ஒரு கவிதை. சூடான சிமென்ட்டுச் சாலை, தழும்புகள்உள்ள நிலப்பரப்பு, ஒளியை உமிழும் இரவு, தொட்டால் ஒட்டிக்கொள்ளும் கும்மிருட்டை நோக்கி நகரும் அந்திப்பொழுது, கண்களைக் குருடாக்கும் கோடை வெயில் எல்லாமே பாலைவனம்தான்; காதல் பாலைவனம் என்று இக் கவிதை சொல்லாமல் சொல்லுகிறது.



"ஒரு கட்டுக்கதை" என்னும் தலைப்பில் இடம் பெற்றுள்ள கவிதை, அவரவர் இருக்க வேண்டிய இடத்தில் இருந்து கொள்ள வேண்டும்; இல்லையெனில் துன்பம் மீக்கூறும் என்பதை எடுத்துச் சொல்லுகிறது.

மாயா ஏஞ்சலோவின் "கூண்டுப் பறவை" என்னும் தலைப்பில் அமைந்த கவிதை, அடிமைத் தளையிலிருந்து விடுபட நினைக்கும் அத்தனை உயிர்களுக்குமான கவிதை. தங்களது அடிமைத் தளைகள் சுக்கு நூறாக உடைபட வேண்டும் என்று கருதும் மனிதர்களுக்கும் சேர்த்து.

எவ்வளவுதான் சுதந்திரத்தோடு இருப்பதாக எண்ணியிருந்தாலும் கூண்டுப் பறவை கூண்டுப் பறவைதான்.
இறக்கைகள் இருந்தும் பறக்க முடியாமற் போனால்,

*கால்கள் இருந்தும் நடக்க முடியாமற் போனால் ,*
*கண்கள் இருந்தும் பார்க்க முடியாமற் போனால்,*
*வாய் இருந்தும் பேச முடியாமற் போனால்,*
*செவிகள் இருந்தும் கேட்க முடியாமற் போனால்*
*அனைத்துமே கூண்டுப் பறவைதான்.*

*சுதந்திர தாகம் தீரவேண்டுமானால் தனது கூண்டை உடைத்துக்கொண்டு வெளியே வர வேண்டும். ஆனால் அந்த தாகம் இல்லாதவர்கள் தாங்களாகவே கூண்டுக்குள் புகுந்து கொண்டு உள்ளே தாழ்ப்பாள் போட்டுக் கொள்கிறார்கள். அப்படிப் பட்டவர்கள் சுதந்திரம் என்றால் என்ன? அடிமைத்தனம் என்றால் என்ன? உரிமைகள் என்றால் என்ன? கடமைகள் என்றால் என்ன? என்றெல்லாம் தெரியாமல் அவற்றைப் பற்றிக் கவலைப்படாமல் கிடக்கிறார்கள்.*

*இந்த நூலில் உள்ள பெரும்பாலான கவிதைகள் குறுந்தொகை நூலைப் போல உள்ளுறை உவமம் போல, இறைச்சி போல தெரிந்து கொள்ள வேண்டிய ஆழமான கருத்துகள் பரவிக் கிடக்கின்றன. அவற்றைத் தெரிந்து கொள்ள வேண்டுமானால் இந்தக் கவிதைகளை எழுதிய கவிஞர் யார்? அவர் எந்த நாட்டுக் கவிஞர், அவர் வாழ்ந்த காலம் எது? அவரது காலத்தின் சூழல்கள் என்ன? அந்தக் கவிஞரின் மன ஓட்டம் என்ன? அவர் பழமை வாதியா? அல்லது புரட்சி வாதியா? சீர்திருத்த வாதியா? ஆத்திகரா? நாத்திகரா? என்பதையெல்லாம் தெரிந்து கொண்டால் அவரது கவிதைகளில் புதைந்து கிடக்கும் முத்துக்களைச் சுலபமாக எடுத்துவிடலாம். கவிஞரைத் தெரிந்து கொள்ளாதவர்களால் அவரது கவிதைகளைப் புரிந்து கொள்ள முடியாது. "கூண்டுப் பறவை" என்னும் கவிதையும் அத்தகைய ஒரு கவிதைகளில் ஒன்றுதான்.*

*பெண் என்பவள் 'பெண்மையை'க் கொண்டிருக்க வேண்டும்; அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் நான்கு பண்புகளையும் கொண்டிருக்க வேண்டும்; நேர் கொண்ட பார்வையைத் தவிர்த்து குனிந்த தலை நிமிராமல் நடக்க வேண்டும்; ஆணுக்கு அடங்கி நடக்க வேண்டும் என்பன போன்ற இயல்புகளை உடையவளே பண்புள்ள பெண்ணாவாள் என்னும் கோட்பாட்டை உடைத்து மாயா ஏஞ்சலோவின் "இலட்சியப் பெண்" வீரநடை போடுகிறாள்.*

*ஓர் இலட்சியப் பெண்ணுக்கான,"அழகு என்பது எங்கே இருக்கிறது" என்பதை எடுத்துச் சொல்லும் விதமாக இந்தக் கவிதை அமைந்துள்ளது.*

*(அழகு என்பது)*
*"என் கைகள் எட்டுமிடத்தில் இருக்கிறது*
*என் இடையின் அகலத்தில் இருக்கிறது*
*என் உதட்டுச் சுழிப்பில் இருக்கிறது "*

*"என் பின்பக்கத்தின் வளைவில் உள்ளது*
*என் புன்னகைச் சூரியனில் உள்ளது*
*என் மார்பின் திமிரலில் உள்ளது*
*என் ஒயிலின் தெய்வாம்சத்தில் உள்ளது"*

*என்று அந்த இலட்சியப்பெண் சொல்லுகிறாள். புரியாத புதிர்தான்.*

*வில்லியம் வேர்ட்ஸ்வொர்த்தின், "கதிரறுக்கும் ஒற்றைக் குமரி" என்னும் கவிதை கடைசிக் கவிதையாக இடம்பெற்றுள்ளது.*
*மேட்டு நிலத்தில் ஒரு குமரிப் பெண் பாடிக்கொண்டே கதிர் அறுக்கிறாள். அவளது அந்தப் பாடல் அரேபியப் பாலைவனத்தில் உள்ள இறுவாட்சிப் பறவையின் குரலை விட இனிமையாக இருக்கிறதாம். இளவேனில் குயிலின் இனிய குரலுக்குக் கூட இவளது குரலைப் போன்ற கிளர்ச்சி கிடையாதாம்.*

*இவருடைய கவிதையில்,*

*"அதோ பாருங்கள்*
*மேட்டு நிலத்தில் ஓர் ஒற்றைக் குமரி*
*தனக்குள் பாடியபடி*
*தனியாகக் கதிரறுக்கிறாள்"*

*என்னும் கவிதை வரிகள் அப் பெண்ணின் வாழ்க்கை முறையையே நமக்குச் சொல்லி விடுகிறது. அப் பெண்ணுக்கு யாரும் துணை இல்லை; எனினும் அவள் தனியாகவேணும் வெய்யிலிலும் கானலிலும் தனது குடும்பத்தினரின் வயிற்றுப் பசிக்காக உழைத்தாக வேண்டிய நெருக்கடி. தனது உழைப்பால் ஏற்படும் சலிப்பை மறப்பதற்காகப் பாடிக்கொண்டே உழைக்கிறாள். இப்படிப் பாடிக்கொண்டே வேலை செய்யும் போக்கு உலகம் முழுவதும் இருப்பதையும் இந்த வரிகள் காட்டுகின்றன. இதனைத்,*

*"தன் சோகம் தணிக்கத்*
*துன்ப கீதம் பாடுகிறாள்"*

என்று கவிஞனே சொல்லிவிடுகிறான்.

அம்மையார் அவர்கள் ஒரு நல்ல எழுத்தாளராக இருப்பதாலும் தமிழக அரசின் உயரிய விருது பெற்று ஒரு நல்ல மொழிபெயர்ப்பாளராக வலம் வருவதாலும் தனது திறமையைப் பயன்படுத்தி இந்த நூலைப் படைத்திருக்கிறார். இவரது மொழிபெயர்ப்புச் சொற்களில் எளிமை கலந்து பாடல் படிப்பதற்கு இனிமையாக உள்ளது.

இவர் மொழிபெயர்ப்புக்காக தேர்ந்தெடுத்த கவிஞர்கள் உலகப் புகழ் பெற்ற கவிஞர்கள். மொழிபெயர்ப்புக் கலை என்பது மிகச் சிறந்த ஒரு கலையாகும். இரண்டு மொழிகளிலும் எந்த அளவுக்கு புலமை பெற்றிருக்கிறோமோ அந்த அளவுக்கு மொழிபெயர்ப்பு சிறப்பாக அமையும். அம்மையாரின் பன்மொழிப் புலமை அவரது மொழிபெயர்ப்புக்கு மிகவும் சிறப்பாகப் பயன்படுவதைப் பார்க்கிறோம்.

நமது எண்ணங்கள், சிந்தனைகள், ஆய்வுகள், செயற்பாடுகள் போன்றவற்றைப் பிற மொழியாளர்களுக்குக் கொடுப்பதும் அவர்களிடமிருந்து நாம் கொள்வதும் நமது மொழி வளர்ச்சிக்கும் பண்பாடு, அறிவியல், கலைகள் போன்றவற்றின் வளர்ச்சிக்கும் வித்திடுவதாக அமையும். நமது தமிழ் இலக்கியங்கள் சங்கக் காலம் முதல் இன்றைய இணையதளம் வரை வளர்ந்துள்ளமைக்குக் காரணம் இவ்வகையான எழுத்துப் பரிமாற்றங்களே ஆகும். இவ்வகையான கருத்துப் பரிமாற்றத்தை நிகழ்த்தியதில் பெரும்பங்கு வகிப்பது மொழிபெயர்ப்புக் கலையே யாகும்.

பிற நாட்டு இலக்கியங்களில் பயன்படுத்தப்படும் உத்திகள், வடிவங்கள், கோட்பாடுகள் போன்றவற்றைப் பெறவும் அவற்றை உணரவும் இந்த மொழிபெயர்ப்புத் துறை பெரிதும் உதவுகிறது.

அறிவியல் துறை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வருகிறது. தொழில் நுட்பங்கள் பிற நாடுகளில் உருவாக்கப் படும்போது அவற்றை மொழிபெயர்த்து அளிப்பதன் மூலம் மற்றொரு நாடும் அத் தொழில் நுட்பத்தினைப் பெற்று வளர்ச்சி அடைகிறது.

எடுத்துக்காட்டாக ஜப்பானியத் தொழில் நுட்பத்தைத் தமிழில் மொழி பெயர்ப்பதால் இங்குள்ளோர் அதனைப் பின்பற்றித் தொழில் துறையில் முன்னேறுகின்றனர்.

ஒரு நாட்டில் உள்ள உயர்ந்த கருத்துகள், நற்பண்புகள் போன்றவை பிற நாடுகளுக்கும் மொழி பெயர்க்கப்பட்டு அளிக்கப்படுவதால் அவை உலகெங்கும் பரவி நட்பு முறை ஏற்பட வழிவகுக்கும். பல மொழிகள் பேசப்படும் ஒரு நாட்டுக்குள் ஒருமைப்பாடு தோன்ற வேண்டுமானால் மொழிபெயர்ப்பு அவசியமாகும். இந்தியாவில் ஏராளமான மொழிகள் பேசும் மக்கள் வாழ்கின்றனர். இவர்களுக்குள் கருத்துப் பரிமாற்றம் நடைபெற வேண்டும். இதற்கு மொழிபெயர்ப்புக் கட்டாயம் தேவைப்படுகிறது.

பொருளாதார முன்னேற்றத்துக்கும் மொழிபெயர்ப்புக்கும் பெரும் பங்கு உண்டு. மொழிபெயர்ப்பின் மூலம் ஒரு நாட்டின் பொருளாதாரக் கொள்கைகள், கோட்பாடுகள், புதிய வளர்ச்சிகள் போன்றவற்றை மற்றொரு நாடு அறியும் போது அவற்றைப் பின்பற்றி அந்த நாடும் வளரும் வாய்ப்பு உருவாகும். அதனால் அந்த இரு நாடுகளும் பொருளாதார முன்னேற்றத்தில் நட்பு நாடுகளாக விளங்கும்.

இன்று அனைத்து நாடுகளையும் கட்டுப்படுத்தும் சக்தியாக அரசியல் விளங்குகிறது. ஒரு நாட்டுக்கும் இன்னொரு நாட்டுக்கும் இடையே நிலவும் அரசியல் நிகழ்வுகளை மொழிபெயர்ப்பின் மூலமே நாம் அறிந்து கொள்ள முடிகிறது. ஒரு நாட்டுத் தலைவரின் உணர்வுகளை இன்னொரு நாட்டு மக்கள் அறிந்து கொள்ள வேண்டுமானால் இந்த மொழிபெயர்ப்பு இன்றியமையாத ஒன்றாக ஆகிவிடுகிறது.

வணிகம், பங்குச்சந்தை புதிய பொருட்கள் போன்றவற்றைப் பிற நாடுகளுக்கு உடனுக்குடன் தெரியப்படுத்த மொழிபெயர்ப்புப் பயன்படுகிறது. இப் பயன்பாடானது உலக அரங்கில் வியாபார நல்லுறவை வளர்த்துக் கொள்ளப் பெரிதும் துணை புரிகிறது.

அறிவியல் தொழில் நுட்பம் உலகெங்கும் வளர்ந்து நிற்கும் இன்றைய நிலையில் மொழி பெயர்ப்புகள் பெருகப் பெருக உலகம் சுருங்கிக் கொண்டே வருகிறது. இதன் காரணமாக இந்த உலகமே ஒரு சிற்றூர் போலச் சுருங்கி அனைத்து நாடுகளுக்கிடையே நல்ல நட்பும் கருத்துப் பரிமாற்றமும் ஏற்பட்டு வருகிறது. இதன் காரணமாக உலக ஒருமைப்பாடு ஏற்பட்டுத் தழைக்கிறது என்பது திண்ணம்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த, இன்றியமையாத மொழிபெயர்ப்புக் கலையில் ஈடுபட்டுள்ள முனைவர் செ. இராஜேஸ்வரி அம்மையார் அவர்கள் இக்கலை மூலம் தமிழன்னைக்குத் தொண்டு செய்து வாழ்வாங்கு வாழ வாழ்த்துகிறேன்.

*தமிழணங்கு, ஆகஸ்ட் 2023*

# புலி மலைப் பாறை ஓவியங்கள்

**முனைவர் ப. தேவி அறிவுச் செல்வம்,**

*கோயில் கட்டிடக்கலை மற்றும்*
*சிற்பத்துறை கள ஆய்வாளர்*



*மதுரையில் 4200 வருடங்களுக்கு முன்பாக வாழ்ந்த மனிதன் விட்டுச் சென்ற தொல்லியல் தடயங்கள் இந்தப் பாறை ஓவியங்கள். அன்றைய காலகட்டத்தில் அம்மனிதர்கள் தாம் பார்த்த, மனதில் பட்ட, சொல்ல விரும்பிய விஷயத்தைப் பாறை ஓவியமாக வரைந்து வைத்துள்ளார்கள். அப்படியான இரும்புக் காலத்தைச் சேர்ந்ததாகக் கருதப்படும் பாறை ஓவியங்கள் மதுரையில் பத்துக்கு மேற்பட்ட இடங்களில் இருக்கின்றன. 28.05.2023 அன்று புலி மலைப் பகுதியில் புதியதாகப் பாறை ஓவியங்கள் சிவப்பு நிறத்தில் வரைந்திருந்ததைக் கண்டறிந்தோம். 4200 வருடங்களுக்கு முன்பாக வாழ்ந்த தொல் பழங்குடி மக்களின் குகையும் குகை ஓவியங்களும் இருக்கும் இடம் மதுரை மாவட்டம் மேலூர் வட்டம் புலிப்பட்டி கிராமத்தில் இருக்கும் புலி மலை.*



*இங்கு மனித உருவங்கள், விலங்குகள், குறியீடுகள் என 100க்கும் மேற்பட்ட சிவப்பு நிறங்களால் ஆன ஓவியங்கள் காணப்படுகின்றன. இவை இரும்புக் காலத்தைச் சேர்ந்தவை எனக் கருதப்படுகிறது. ஏற்கனவே மதுரையில் ஆறு இடங்களில் சிவப்பு நிறங்களில் கண்டறியப்பட்ட ஓவியங்கள் வரிசையில் இதுவும் புதிதாக இணைய உள்ளது. ஓவியத்தில் தனித்தனியாக நிற்கும் மனிதனும், அம்மனிதனின் கால் அருகே விலங்கும், மேலும் மூன்று விதமான விலங்குகளும் காணப்படுகின்றன. வட்டம், நட்சத்திரம், கட்டம் கட்டமாகக் கொண்ட சதுர வடிவம் எனப் பலவகையான குறியீடுகளும் காணப்படுகின்றன. இவை கோட்டு உருவமாகவும் செஞ்சாந்து உருவமாகவும் மிகவும் உயரமான உருவம் கொண்ட மனித உருவங்களுமாக உள்ளன.*



*சற்றொப்ப 40 நபர்கள் தங்கும் அளவிற்கான அளவு கொண்டதாக இரு புடவுகளில் ஒரு புடவில் இக்குகை ஓவியம் காணப்படுகிறது. சொரசொரப்பான செங்குத்து மலையாக இருப்பதால் பாதுகாப்பான முன்னேற்பாட்டுடன் 28.05.2023 அன்று சென்று கண்டறிந்தோம். தமிழகத்தைப் பொறுத்தவரை சிவப்புப் பாறை ஓவியங்களை 5000 ஆண்டுக் காலம் கொண்டவையாகக் கணிக்கப்படும் நிலையில் இப்பாறை ஓவியத்தின் சரியான காலத்தை ஆய்வு செய்ய வேண்டிய கட்டாயம் உள்ளது. அதற்காகத் தொல்லியல் துறையுடன் இணைந்தோ அல்லது இப் புலிப்பட்டி ஊரைச் சேர்ந்த ஜனநாயக வாழ்வுரிமை சங்கத்துடனோ இணைந்து, பாறை ஓவியங்களின் காலத்தைக் கணிக்க உதவும் கார்பன் 14, தெர்மோ லூமினசன்ஸ், ஆப்டிகலி ஸ்டிமுலேட்டடு லூமினசன்ஸ் அல்லது யுரேனியம் தோரியம் வகை ஆய்வினை செய்ய முடிவு செய்துள்ளோம்.*



# இணைச்சொற்கள்

**பேராசிரியர் கு.இராமகிருட்டினன்**
*முன்னாள் தமிழ்ப் பேராசிரியர் &*
*தென்னிந்திய மொழிகள் துறைத் தலைவர்,*
*பஞ்சாபு பல்கலைக்கழகம், சண்டிகர்-14*



*1. பொறுத்தவரை:*

*பொறுத்தவரை என்றும், பொருத்தவரை என்றும் இரு வேறு சொல்லாட்சிகள் முகநூலில் காணப்படுகின்றன. எது பொருத்தமுடைய சொல்லாக இருக்கும் என்று ஆயத் தலைப்பட்டேன். முதலில் அகரமுதலிகளை ஆய்ந்தேன். செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியைப் பார்த்தேன். அதில் பொருத்தம் என்பதற்குப் பலபொருள்கள் உள. தகுதி, இணக்கம், உடன்படிக்கை,பொருத்தவிணக்கம், மன நிறைவு, முதலிய பொருள்கள் உள.*

*பொருத்துதல்: (செய்குன்றாவினை) - பொருந்தச்செய்தல், உடன்படுத்தல், கூட்டுதல், வேலைக்கமர்த்தல், இரு பொருள்களை இசைத்தல், விளக்கேற்றுதல், போர் மூட்டுதல்.*
*பொருத்து: (பெயர்) - இணைப்பு, உடல் மூட்டு, மரத்தின் இணைப்பு, மரக்கணு, ஒன்று சேர்க்கை, ஒப்பந்தம் முதலியன.*

*பொறுத்தல்: (செ. குன்றாவினை) - சுமத்தல், தாங்குதல், அணிதல், மன்னித்தல், ஏற்றமை, பொறுப்பேற்றல் (To take responsibility), தள்ளிப்போடுதல், முதலிய பொருள்கள் உள.*
*பொறுத்தல்: (செ.கு,. வினை) - அடக்கமாய் இருத்தல், இடை நிறுத்தல் (TO STOP, wait), பொறுப்பாதல் (Responsibility) முதலியன உள.*
*பொறுப்பற்றவன்: பொறுப்பு ஏற்காதவன்.*
*பொறுப்பாளி: பொறுப்பானவன்.*
*பொறுப்பு: பாரம், உறுதி(Duty, Responsibility), தகுதி.*
*பொறுப்புடைமை: கடமைப்பொறுப்பு.*
*மேலே குறிப்பிட்ட பொருள்கள் செ.சொ.பேரகரமுதலியில் காணப்படுகின்றன.*

*'தமிழ் தமிழ் அகரமுதலி' யில் காணப்படுபவை:*
*பொறுப்பு: பதவி , கடமை, பாரம், தகுதி, பொறுமை*

பொருப்பு: பக்கமலை.
பொருத்து: இணைப்பு, உடல் மூட்டு, மரக்கணு, ஒன்று சேர்க்கை, ஒப்பந்தம்.

*'Pals Dictionary'* **யில்** காணப்படுபவை:
பொறுப்புடைமை, பொறுப்புள்ள, *Responsible.*
பொறுப்பு, *Responsibility.*
பொறுத்திரு- *Bear, endure-*
பொறுத்தவரை-*So far as I am concerned, as far as that point is concerned.*

''பொருத்தவரை என்ற சொல் அகராதியில் இல்லை''.



அகரமுதலிகளை ஆய்ந்ததில் பொருத்தவரை, பொறுத்தவரை இரண்டும் வெவ்வேறு பொருள்களைக் கொண்டுள்ளன எனத் தெரிகிறது. பொருத்தல் என்பது ஒன்றை ஒன்றில் பொருந்தச் செய்வது என்று தெரிகிறது. பொறுத்தலென்பது பொறுப்பாதல் என்ற பொருளில் வருகிறது. *''Pals Dictionry''* எனும் அகரமுதலி 'பொறுத்தவரை' என்ற சொல்லுக்குப் பொருள் தந்துள்ளது. ''பொறுத்தவரை-*So far as I am concerned, as far as that point is concerned-*'' என்று பொருள் தருகிறது. அதுவே ''பொருத்தவரை'' என்ற சொல்லே அகரமுதலியில் இல்லை என்று தெளிவுபடுத்துகிறது.

*எனவே அகரமுதலிகளின்படி 'பொறுத்தவரை' என்ற சொல்லே சரி. 'பொருத்தவரை' என்ற சொல்லே இல்லை. என்னைப் பொறுத்தவரை இக்கருத்தையே ஏற்றுக்கொள்கிறேன்.*

*2. ஆறு, நூறு என்பன நெடிற்றொடர்க் குற்றியலுகரங்கள். வேற்றுமையிலும் அல்வழியிலும் குற்றியலுகரங்கள் எவ்வாறு புணரும் என்று இலக்கண நூல்கள் விரித்துரைக்கின்றன. ஆனால் இவ்விரண்டுக்கும் பொருள் வேறுபாடுகள் உண்டு. அப்பொழுது எவ்வாறு புணரும் என்று இலக்கண நூல்கள் விரித்துரைக்கவில்லை. குறிப்பாக 'நூறு' என்பதன் புணர்ச்சி விரித்துரைக்கப்படவில்லை.*

*மக்கள் மொழியில் வேறுபாடு இருந்ததால் விரித்துரைக்கவில்லை போலும். (எடுத்துக்காட்டு: தொல். எழு. நூற்பா 412).*
*ஆறு என்பதற்கு எண் ஆறு என்ற பொருளும், நீரோட்டம் என்ற பொருளும் உண்டு, இரண்டும் பெயர்ச்சொற்கள்; வினைச் சொல் பொருளும் உண்டு. ஒருசொல் பல்பொருள். அவ்வாறே நூறு என்ற சொல்லுக்கும் பல்பொருள் உண்டு. நூறு என்பதற்கு எண் நூறு என்றும், நூறுதல், கிழித்தல், நூற்றல், திரித்தல் என்ற வினைச்சொல் பொருள்களும் உண்டு. பெயர்ச்சொல் பொருளும்,வினைச்சொல் பொருளும் உள.*

*ஒரு சொல்லுக்குப் பொருள்கள் வேறாக இருக்கும் பொழுது அச்சொல்லுக்குப் புணர்ச்சி விதிகளும் வேறுபடுகின்றன என உணர்கிறோம்.*
*ஆறு என்பது எண்ணாக இருந்தால்; ஆறு, ஆறை, ஆறால், ஆறோடு, ஆறுடன், ஆறுக்கு, ஆறிலிருந்து, ஆறுடைய, ஆறில், ஆறே என்று புணரும்.*
*நூறு என்பது எண்ணாக இருந்தால்; நூறு, நூறை, நூறால், நூறோடு, நூறுடன், நூறுக்கு, நூறிலிருந்து, நூறுடைய, நூறில், நூறே என்று புணரும்.*

*ஆறு என்பது நீரோட்டமாக இருந்தால்; ஆறு, ஆற்று, ஆற்றை, ஆற்றால், ஆற்றோடு, ஆற்றுக்கு, ஆற்றிலிருந்து, ஆற்றது, ஆற்றுடைய, ஆற்றில், ஆறே என்று புணரும்.*
*நூறு என்பதன் வேறொரு புணர்ச்சி; நூறு, நூற்று, நூற்றை, நூற்றால், நூற்றுக்கு, நூற்றிலிருந்து, நூற்றது, நூற்றில், நூறே என்று வேற்றுமையில் புணர்கிறது.*
*ஆனால் நூறு என்பது வினையாக இருப்பதால், தொழிற்பெயராகிப் புணரும். அப்போது,*
*நூல்நூறு, நூற்று, நூற்றால், நூற்றதால், நூற்றதற்கு, நூற்றதிலிருந்து, நூற்றதனுடைய, நூற்றதில் என்றாகும்.*

நூற்றுக்குநூறு, நூற்றுக்கணக்கான, நூற்றின், நூற்றில் (நூத்தில் ஒரு சொல்) நூற்றொன்று, இரண்டு. மூன்று......(கூட்டலில் வரும்).

இங்கு நூறு இரட்டிப்பதைப் பார்க்கலாம். இது பற்றி இலக்கண நூல்கள் விளக்கவில்லை. நூற்றால், நூற்பதால் இரண்டும் ஒரே புணர்ச்சி, ஆனால் இரு வகை.

'ஒற்றிடை இனமிகா மொழியு மாறுளவே
அத்திறத்து இல்லை வல்லெழுத்து மிகலே'. (தொல். எழு.412)

என்று ஒற்று மிகா மொழிகளும் உள என்று கூறியவர், ஒற்று இரட்டிக்கும் இடங்களும் உள என்பதை எடுத்துக்காட்டவில்லை. உன்னுங்கள். குற்றியலுகரப் புணர்ச்சியில் அடங்கும் என்பதால் கூறவில்லை போலும். இலக்கண நூல்கள் இப் புணர்ச்சி விதிகளை விரித்துத்துரைத்திருக்கலாம். கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் முதலான எண்ணுப்புணர்ச்சிக்கும் விரிவாக இலக்கண நூல்களில் கூறப்படவில்லை. யானிதுபற்றித் தனியே ஒரு கட்டுரை எழுதியுள்ளேன்.

3. கருப்பு, கறுப்பு:
கருப்பு-பஞ்சம்
கறுப்பு-கரியநிறம்
கருமை,கரிய என்றெழுதும் போது இடையினம் வரினும் கறுப்பு என எழுத வல்லினம் தான் போடவேண்டும்.

தொல்காப்பியம் என்ன சொல்லுகிறது?

"கறுப்பும் சிவப்பும் வெகுளிப்பொருள
நிறத்துரு உணர்த்தற்கும் உரிய என்ப."

வெகுளி -சினம். நிறத்தை உணர்த்தவும் உரியதாகும். கறுப்பு சிவப்பு என்பன நிறங்களாகும்.

அஃதெப்படி? கரிய, கருமையில் இடையினம் வரும்போது கறுப்பில் வல்லினம் வரும்?
தமிழில் இப்படி வருமா? வரும்."அவரிடத்தில் நிரம்ப அறிவிருக்கிறது. இவரிடத்தில் நிறையப் பொருள் இருக்கிறது."(நிரம்ப-நிறைய, இடையினம், வல்லினம்)
கள்--கரு--கருப்பு--கருமை ( செ.சொற். பேரகரமுதலி).
கருப்பு என்ற சொல்லுக்கு, 'கருமை, இருள், இன்மை, வறுமை, இருண்டு தோன்றும் பேய், கரி' முதலிய பொருள்களைச் செ.சொற். பேரகரமுதலி தருகிறது.

*கறுப்பு என்பதற்கு அது, கருமை, சினம், குற்றம், தழும்பு, பகை முதலிய பொருள்களைத் தருகிறது.*

*''கரு, கறு இரண்டும் நிறத்தைக் குறிக்கின்றன. கரு என்பதை நோக்கக் கறு என்பது நிறத்தைக் குறிப்பது மிகச் சிறுபான்மையே.'' என்றும் தெளிவுபடுத்துகிறது.*



*மேலும் கருங்குரங்கு, கருங்குருவி, கருஞ்சட்டை, கருமுகில், கார் குழலி முதலிய சொற்களை நோக்குக. கருப்பு என்பதே கருமை என்பதற்குப் பொருத்தமாக இருக்கிறது. மேலும் தொல்காப்பியர், உரியியலில் ( 372) ''கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள''எனக் கூறி , அடுத்த நூற்பாவில், ''நிறத்துரு வுணர்த்தற்கு முரிய வென்ப'' என்றும் கூறிக் கறுப்பு என்பதற்குச் சினம் என்பதற்கு முதன்மை தந்து வண்ணத்துக்கு அடுத்த இடம் தருகிறார். எனவே கருப்பு என்பது கருப்பு வண்ணம் எனலாம்.*

*கறுப்பு என்பதற்குச் சினம் முதற்பொருளாகும். இவ்வுரையையும் கருதுங்கள்: ''கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருளவென்றதனால், கருங்கண் செவ்வாயெனப் பண்பாயவழியல்லது தொழிலாயவழி நிறவேறுபாடுணர்த்தா வென்பது படுதலின், அதனைப் பாதுகாத்தவாறு''. தொல்.சொல். சேனா.373.*

*4. இரு சொற்களாய்வு:*

*இரு, உள்:*

*இருக்கிறது என்றாலும் உள்ளது (உளது) என்றாலும் ஒரே பொருள்தான். இரு என்ற ஏவல் வினையிலிருந்து பலவினையாக்கஞ் செய்யலாம். நான்*

*இருக்கிறேன், நாம் இருக்கிறோம், நாங்கள் இருக்கிறோம். நீ இருக்கிறாய், நீவிர் ( நீயிர், நீர்)இருக்கிறீர், நீங்கள் இருக்கிறீர்கள், அவன் இருக்கிறான், அஃது இருக்கிறது அவை(அவைகள்) இருக்கின்றன.*

*இறந்த காலத்தில்; இருந்தேன், நாம் இருந்தோம், நீ இருந்தாய், அஃது இருந்தது. எதிர் காலத்தில்; நான் இருப்பேன், நாம் இருப்போம், நீ இருப்பாய், அஃது இருக்கும்.*

*உள்ளது என்பதிலிருந்து நான் உள்ளேன், நாமுள்ளோம், நீவிர்( நீயிர், நீர்) உள்ளீர், நீங்கள் உள்ளீர்கள், அவன் உள்ளான், அஃது உள்ளது, அவை (அவைகள்) உள்ளன என நிகழ் காலத்தில் மட்டும் வினையாக்கம் செய்ய இயலும். இறந்த காலத்திலும் எதிர் காலத்திலும் செய்ய இயலாது.*



*பெயரெச்சமாக மாறும்போது இரு என்பது இருந்த(இறந்த காலம்), இருக்கிற ( நிகழ் காலம்), இருக்கும்( எதிர் காலம்) எனவாகும். ஆனால், உள்ளது என்பது உள்ள என நிகழ்காலப் பெயரெச்சமாகும். இதற்கு இறந்தகால, எதிர்காலப் பெயரெச்சங்கள் இல்லை. அதனால் இருசமயம் என்பது வினைத் தொகை (இருந்த சமயம், இருக்கின்ற சமயம், இருக்கும் சமயம்) (பொதுவாக வழங்குவதில்லை). உள்பொருள் என்பது வினைத் தொகை ( நிகழ் காலத்தில் மட்டும் வரும்).*



இருக்கிறவன், இருந்தவன், இருப்பவன் என்பன வினையாலணையும் பெயர்களாகும்.

உள்ளவன், உள்ளவள் என்பன நிகழ் காலத்தில் மட்டும் வரும் வினையானலணையும் பெயர்களாகும்.

இருந்தும், இருந்தாலும். இருப்பினும், இருக்காமல், இருக்காமலும், இருக்கும், இருக்கும்போது என்றும், பல சொற்கள் அமைக்கலாம். இவ்வாறு உள்ளது என்பதிலிருந்து அமைக்கவியலாது.

இவ்விரண்டு சொற்களுக்கு எதிர்மறையாக இல்லாமல், இல்லாமலும், இல்லாவிட்டால், இல்லாவிட்டாலும், இல்லாத பொழுது, இல்லாதவன், இல்லாதவள் இல்லாதவர், இல்லாதது, இல்லாதவை முதலியன அமைக்கலாம்.

5 . அறிக்கை, அறிவிப்பு:

அறி என்பது செய்யென்னேவல், வினைப் பகாப் பதம். அறி என்பது ஏவல் வினை. இச் சொல்லிலிருந்து பிற வினையாக்கம் செய்யலாம். அறி என்பது தன் வினை. ஒருவன் ஒரு செயலைத் தானே செய்தல். அறிவி என்பது பிற வினை. ஒருவன் ஒரு செயலைப் பிறரைக் கொண்டு செய்வித்தல். தன் வினையிலிருந்து நான் அறிகிறேன், நீ அறிகிறாய், அவன் அறிகிறான் எனக் கூறலாம். அறிவி என்பதிலிருந்து நான் அவனுக்கு அறிவித்தேன், நீ அவனுக்கு அறிவித்தாய், அவன் உனக்கு அறிவித்தான் என வரும்.

அறி என்பதிலிருந்து அறிக்கை என வரும். அறிவி என்பதிலிருந்து அறிவிப்பு எனத் தொழிற் பெயர் வரும். யான் அறிக்கை விடுத்தேன் எனலாம். யான் பிறர் வழி அறிவிப்புச் செய்தேன் என வரும்.

ஆனால் அறிவிக்கை என்ற ஒரு சொல் இப்பொழுது சில ஊடகங்கள் வழி வருகிறது. இஃது அறி என்பதை அடிப்படையாகக் கொள்ளவில்லை. அறிவி என்பதையும் கொள்ளவில்லை. எனவே மரபு வழு என உணரலாம். எனவே இந்த வழுவைத் தவிர்த்தல் முறையன்றோ?

இடமறிந்து அறிவிப்பு அல்லது அறிக்கை என எழுத வேண்டும். அறிவிக்கை என்பது வழு, பிழை.

# எம்ஜிஆரின் தொழில் இசைப் பாடல்கள் கூறும் சமூக விழிப்புணர்வுக் கருத்துகள்

*சைதையாரின் எம் ஜிஆர் திரைப்படப் பாடல்கள் நுண் ஆய்விருக்கையின் பொது நிகழ்த்திய சொற்பொழிவு (19/07/2023)*

**வே. கிருஷ்ணகுமார்**,
*எல்.ஐ.சி.அதிகாரி (ஓய்வு),*
*சென்னை*



*மக்கள் திலகம் எம்ஜிஆர் அவர்களின் படங்கள் பாடங்களாக அன்றும் இன்றும் கருதப்படுகின்றன என்பது நிதர்சனமான உண்மை. அந்த அடிப்படையில், எம்ஜிஆர் அவர்களின் படப் பாடல்கள் ஏறக்குறைய 1000 இருப்பினும், காலத்தால் அழியாத் தத்துவம், கொள்கைப் பாடல்கள் என்பன 100க்கு மேல் இருக்கும் என்றால் அது மிகையாகாது. அத்தகைய பெருமை மிகு பாடல்களில் உழைக்கும் வர்க்கத்தினரின் மேன்மையைப் பறைசாற்றும் பல சமூக விழிப்புணர்வுப் பாடல்களில் ஏழு பாடல்களைப்பற்றி மட்டும் இங்கே ஆய்வு ரீதியில் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன்.*

***1. தொழிலாளி:***

*கவிஞர் ஆலங்குடி சோமு அவர்களின் 'ஆண்டவன் உலகத்தின் முதலாளி' எனத் தொடங்கும் அழகிய பாடலைப் பலமுறை இனிய இசையோடும் டிஎம்எஸ் அவர்களின் வசீகரக் குரலிலும் கேட்டு ரசித்திருப்போம். இப்பாடலின் பிரமிப்பான அம்சங்களைச் சற்று அலசுவோம், ஒரு சாமானிய ரசிகனாக. கடவுள் இருக்கின்றார் என்ற நம்பிக்கையில், மாற்று அரசியல் நிலைப்பாடு உள்ளதாகச் சொல்லப்பட்ட அந்தக் காலகட்டத்தில், பாடல் துவக்கம். அவர்தான் இந்த ஒட்டு மொத்த உலகிற்கும் 'முதலாளி'. பூமித்தாயின் குழந்தைகளாக நாம் அனைவரும் சகோதரர்கள், கூட்டாளிகள் என்ற சமத்துவச் சிந்தனை பிரகடனப் படுத்தப்படுகிறது..*

*'தொழிலாளி ' என்பதன் சரியான பொருள் ( ஆங்கிலத்தில் 'காம்ரேட்' அதாவது 'தோழர்' ) துல்லியமாகத் தரப்பட்டுள்ளது . " இருப்பதைக் கொண்டே சிறப்புடன் வாழும் இலக்கணம் படித்தவன்"; நான் பணியாற்றிய ஆரம்பக் காலத்தில் என் அலுவலகத்தின் தொழிற்சங்கத் தலைவருக்கு இந்த விளக்கத்தைத் தந்து பாராட்டுப் பெற்றது நினைவுக்கு வருகிறது. அதே சீனியர்,*

*அந்த நேரத்தில் கேட்டது: அலுவலகப் பணி செய்பவருக்கு விளக்கம் பொருந்துமா? 'ஆம்' என்றேன். இரும்பு போன்ற தன் கரத்தை நம்பி ஓங்கி அதாவது, உயர்ந்து நிற்பவன்.*

*படத்தில் அசோகன்,*
*“கை வண்டி இழுத்தா மட்டும் போதாது; கை கால் ஒடையும்படி கல் உடைக்க வைக்கணும்" என்று கூறுவதற்கு,*
*"கல்லைக் கனியாக மாற்றும் தொழிலாளி கவனம் ஒரு நாள் திரும்பும்"*
*என்று பதில் வரும்.*
*"அதில் நல்லவர் வாழும் புதிய சமுதாயம் நிச்சயம் ஒரு நாள் அரும்பும்"*
*என்ற சமுதாய - முன்னேற்ற அக்கறை 'பளிச்' சென நம்பிக்கையுடன் வெளிப்படுகிறது.*

*"வாழ்க்கை என்றொரு பயணத்திலே - பலர்*
*வருவார் போவார் பூமியிலே;*
*வானத்து நிலவாய் ஒளிவீசும் பண்பில் சிலர் மட்டுமே இருப்பர்.”*
*அந்த வரிசையில் முதல் இடத்தில் இருப்பது தொழிலாளிதான் என்பது தத்துவார்த்தமான, வாழ்க்கை பற்றிய உயிரோட்டமான உருகும் ‘திருவாசகம்’. மிகவும் மென்மையான குரலில் நெஞ்சில் நெருடலை ஏற்படுத்தும் தாக்கத்தைத் தருகின்ற தத்துவ, சமூக, சமுதாய எதார்த்த, இனிய பாடல் இது.*

***2. நாடோடி மன்னன்:***
*புரட்சி நடிகரை புரட்சித் தலைவராக மக்கள் அடையாளம் கண்டு அங்கீகரித்து மகிழ்ந்த மகத்தான வெற்றிக் காவியம் 'நாடோடி மன்னன்'. இத் திரைப்படத்தில் இடம்பெற்ற புரட்சிக் கவிஞர் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் அவர்களின் பிரசித்தி பெற்ற பாடல்களுள் ஒன்று:*

*"சும்மா கிடந்த நிலத்தைக் கொத்தி*
*சோம்பல் இல்லாம ஏர் நடத்தி*
*கம்மாக் கரையை ஒசத்திக் கட்டி*
*கரும்புக் கொல்லையில் வாய்க்கால் வெட்டி*
*சம்பாப் பயிரைப் பறிச்சு நட்டு*
*தகுந்த முறையில் தண்ணீர் விட்டு*
*நெல்லு விளஞ்சிருக்கு வரப்பும் உள்ள மறஞ்சிருக்கு*
*அட காடு விளஞ்சென்ன மச்சான்*
*நமக்குக் கையும் காலும் தானே மிச்சம்*
*கையும் காலும் தானே மிச்சம்*

இப்போ காடு விளையட்டும் பொண்ணே
நமக்குக் காலமிருக்குது பின்னே
காலமிருக்குது பின்னே
மண்ணைப் பொளந்து சொரங்கம் வச்சு
பொன்னை எடுக்கக் கனிகள் வெட்டி
மதிலு வச்சு மாளிகை கட்டி
கடலில் மூழ்கி முத்தை எடுக்கும்
வழிகாட்டி மரமான தொழிலாளர் வாழ்க்கையிலே
பட்ட துயரினி மாறும்
ரொம்ப கிட்ட நெருங்குது நேரம்

மாடா உழைச்சவன் வாழ்க்கையிலே
பசி வந்திடக்காரணம் என்ன மச்சான்

அவன் தேடிய செல்வங்கள் வேறு இடத்திலே
சேர்வதினால் வரும் தொல்லையடி

பஞ்சப் பரம்பரை வாழ்வதற்கே இனி
பண்ண வேண்டியது என்ன மச்சான்

தினம் கஞ்சி கஞ்சி என்றால் பானை நிறையாது
சிந்திச்சு முன்னேற வேணுமடி

வாடிக்கையாய் வரும் துன்பங்களை - இன்னும்
நீடிக்கச் செய்வது மோசமன்றோ?

இருள் மூடிக் கிடந்த மனமும் வெளுத்தது
சேரிக்கும் இன்பம் திரும்புமடி - இனி
சேரிக்கும் இன்பம் திரும்புமடி

நல்லவர் ஒன்றாய் இணைந்துவிட்டால்
மீதம் உள்ளவரின் நிலை என்ன மச்சான்

நாளை வருவதை எண்ணி எண்ணி
அவர் நாழிக்கு நாழித் தெளிவாரடி

*அட காடு விளஞ்சென்ன மச்சான்*
*நமக்குக் கையும் காலுந்தானே மிச்சம்*
*கையும் காலுந்தானே மிச்சம்*

*நானே போடப்போறேன் சட்டம் - பொதுவில்*
*நன்மை புரிந்திடும் திட்டம்*
*நாடு நலம் பெறும் திட்டம்*
*நன்மைப் புரிந்திடும் திட்டம்*
*நாடு நலம் பெறும் திட்டம்"*




*இப் பாடலைப்பற்றி: பாமர மக்களும் பக்குவமாகப் புரிந்திடும் வண்ணம் சமுதாயச் சீர்திருத்தக் கருத்துக்கள் மற்றும் பகுத்தறிவுச் சார்ந்த செய்திகளை எளிய இனிய இயல்பான நடையில் சொல்கிறது. சாமானிய ஏழை விவசாயித் தம்பதியினரின் கேள்வி-பதில் போன்ற பாணியில் கச்சிதமாகக் கடைக்கோடி மாந்தருக்கும் கொண்டு சேர்த்த வெற்றிகரமான விழிப்புணர்வுப் பாடல் இது. முதன்முறையாக முதலமைச்சராகப் பதவி ஏற்றவுடன் எம் ஜி ஆர் அளித்த நேர்காணலில், "இந்த முதல்வர் நாற்காலியின் நான்கு கால்களில் ' பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் அவர்களின் எழுச்சி மிகு பாடல்கள் ஒன்று ", என்று கூறினார்.*

*பாடலின் ஒவ்வொரு சொல்லும், வரியும் மிக எளிமையாகப் புரிந்து கொள்ளும் விதத்தில் வடிவமைக்கப் பட்டுள்ளதால் இப்பாடல் குறித்து மேற்கொண்டு பொழிப்புரை சொல்ல வேண்டிய தேவை இருப்பதாகத் தெரியவில்லை.*

*"அட காடு விளஞ்சென்ன மச்சான் - நமக்குக்*
*கையும் காலுந்தானே மிச்சம்*
*கையும் காலுந்தானே மிச்சம்*

*காடு விளயட்டும் பொண்ணே - நமக்குக்*
*காலம் இருக்குது பின்னே - நமக்குக்*
*காலம் இருக்குது பின்னே"*

*இந்த வாசகங்கள் மீண்டும் மீண்டும் இந்தப் பாடலில் முதன்மையாக இடம் பெற்றிருப்பதே அதன் முக்கியத்துவத்தை நமக்கு வெளிச்சம் போட்டுக் காட்டுகின்றன. பொதுமக்கள் மத்தியில் சாதாரணமாக அன்றாடம் எழும் கேள்விகளாக அமையும் கதாநாயகியின் வினாக்களுக்கு விடையாகக் கடைமடை மக்களுக்கும் சென்றடைய வேண்டிய கருத்துக்களைப் போதனைகள் போல் அல்லாமல், ஏற்கக் கூடிய முறையில் கதாநாயகனின் மூலம் சொல்லியிருப்பது போற்றுதலுக்குரியது.*

*உலகம் உய்ய, ஊர் வாழ, வழிகாட்டி மரமான தொழிலாளர் வாழ்க்கையை உயர்வடையச் செய்ய நல்ல திசை காட்டி தேவை. உழைத்துச் சம்பாதித்த வருமானத்தை முறையாகச் செலவழித்து தேவையான சேமிப்புடன் சரியான பொருளாதார திட்டமிடுதல் அவசியம், வயிற்றுப் பிழைப்புக்காக வெறுமனே அழுது புலம்பாமல், கடவுளின் சித்தம் என்று எண்ணி விதியை நம்பி வெம்பி விடாமல், பகுத்தறிவுத் துணை கொண்டு வாழ்வில் முன்னேற முயல வேண்டும் போன்ற அர்த்தமுள்ள அறிவுரைகளை (உட்பொருளுடன்) ஆணித்தரமாக எடுத்துரைத்திருப்பது பாராட்டுதலுக்கு உரியது.*

*'மூடிக் கிடந்த மனமும் வெளுத்தது - இனி*
*சேரிக்கும் இன்பம் திரும்பும் '*
*மற்றும்*
*'நானே போடப்போறேன் சட்டம் - பொதுவில்*
*நாடு நலம் பெறும் திட்டம்;*
*வாழ்வில் நன்மை புரிந்திடும் திட்டம்'*
*போன்ற வரிகள் அரசியல் வானில் குறிப்பிடும்படியான தாக்கத்தை ஏற்படுத்தி, ஆட்சி மாற்றத்திற்கு அடித்தளமாக அமைந்தன என்பது உண்மை.*

*முத்தாய்ப்பாக முடிக்கும் போது உள்ள (கடைசிச் சொட்டு என்று சொல்வார்களே அது போல) நல்லவர் ஒன்றாக இணைந்து விட்டால், மீதியுள்ள*

*மற்ற அனைவரும் வருங்காலத்தைத் தொலை நோக்கோடு அணுகி, படிப்படியாகத் தெளிவு பெற்றாக வேண்டிய கட்டாயத்திற்கு ஆட்படுவர் என்ற கருத்து மொத்தப் பாடலுக்கும் மெருகேற்றி நாடு வளம் பெறும் என்ற நல்ல செய்தியுடன் நிறைவு பெறுகிறது.*

***3. விவசாயி:***

*இத் திரைப்படத்தில் கவிஞர் மருதகாசி எழுதிய,*
*"கடவுள் என்னும் முதலாளி*
*கண்டெடுத்த தொழிலாளி விவசாயி"*
*எனத் தொடங்கும் பாடலின் முதல் வரியிலேயே 'கடவுள் இருக்கின்றார், அவர் தான் அனைவருக்கும் முதலாளி' என்ற கருத்து விதைக்கப் படுகிறது. ஆண்டவன் உலகத்தின் முதலாளி, விவசாயியும் அவனுக்கு ஒரு தொழிலாளி' தான் என்ற கருத்தும் தூவப்படுகிறது.*

*விவசாயி என்பவன் யார் என்று அவரது தன்மை, குணாதிசயம் பற்றி குறிப்பிட்டதோடு; அவனது சிந்தனை முன்னேற்றப் பாதையில், செயல்பாடு முழு மூச்சாக தினசரி உழைப்பு, மண்ணிலே முத்து (விளைவிக்கும் நெல் முத்து) எடுத்து பிறர் வாழ்வதற்கான உழைப்பு என்று குறிப்பிடுவதோடு, என்ன வளம் இல்லை இந்த நாட்டில், நாம் ஏன் கையை ஏந்த வேண்டும் வெளிநாட்டில் என்ற தற்சார்பு வாழ்க்கைக் கருத்தும் வலியுறுத்தப்படுகிறது.*

*ஒழுங்காகப் பாடுபட்டு வந்தால்,*
*"வரப்புயர நீர் உயரும்,*
*நீர் உயர நெல் உயரும்,*
*நெல் உயரக் குடி உயரும்"*
*என்ற ஔவையாரின் அறிவுரை உள்வாங்கப்பட்டுள்ளது. அந்நியச் செலாவணி அபரிமிதமாக வரும் மற்றும் தன்னிகரற்ற தேசம் உருவாகும், நம் மதிப்பு வெளிநாடுகளில் உயரும், 'நாம் விவசாயத்தில் தலைசிறந்து விளங்கினால் மட்டும்' என்ற சிறந்த பொருளாதாரக் கொள்கை கோடிட்டுக் காண்பிக்கப் பட்டுள்ளது (உம்: பஞ்சாப் மாநிலம்).*

*நம்மிடையே நிற வேறுபாடுகள் இருந்தாலும், திராவிட அல்லது கம்யூனிஸ்ட் சித்தாந்தங்கள் வலம் வந்தாலும் சமரச சன்மார்க்க சிந்தனையுடன் 'வேற்றுமையில் ஒற்றுமை ' என்ற நம் இந்தியாவின் தனி அடையாளத்துடன், பொறுப்புள்ள பெரியோர்கள் வழிகாட்டுதல் படி செயல்படுதல் அவசியம் என்ற அறிவுறுத்தும் வரிகள் பாடப்படுகையில் காந்தியடிகள், நேருஜி,*

*கர்மவீரர், பேரறிஞர் ஆகியோர் பேசுவது போன்ற காட்சிகள் திரையில் பொருத்தமாகக் காண்பிக்கப்படும்.*

*நம் நாட்டில் பல்வேறு அரசியல் கட்சிகள் தங்கள் தனிப்பட்ட எண்ண அனுமானங்களின் அடிப்படையில் பல வண்ணங்களில் கொடிகளாகப் பறக்கின்றன. இருப்பினும்,*

*"பறக்க வேண்டும் எங்கும் ஒரே சின்ன கொடி - அது*
*பஞ்சம் இல்லை என்னும் அன்னக்கொடி'*

*(திரைக் காட்சியில், அரசியலுக்கு அப்பாற்பட்டு திமுக கொடியும் மற்ற கொடிகளில் வரிசையில் ஒன்றாகத்தான் காட்சிப்படுத்தப்படும்). விவசாயி தொடங்கி அன்னக்கொடி வரை அருமையான மேன்மையான தொகுப்பு இப்பாடல்.*




*முழுக்க முழுக்க வயற்காட்டில் விவசாயிகள் மத்தியில், பெரும்பாலும் டிராக்டர் ஓட்டி உழுதவாறும், பயிர்களை அள்ளி அணைத்துக் கொண்டும், அசத்தலான 'கெட் அப்பில் ' தொடக்கப் பாடல், இப்பாட்டுக்கு முந்தைய காட்சியின் வசனம் 'டாக்டருக்கும் இன்ஜினியருக்கும் ஏன் இந்த உலகத்திற்கே சோறு போடுபவன் யார்? ' என்பது.*

***4. விவசாயி – 'நல்ல நல்ல நிலம் பார்த்து' பாடல்:***

*இத்திரைப்படத்தில் இடம்பெற்ற உடுமலை நாராயணகவி அவர்களின் உயர்தர உன்னதப் பாடல் " நல்ல நல்ல நிலம் பார்த்து ".*

*"நல்ல நல்ல நிலம் பார்த்து நாமும் விதை விதைக்கணும்*
*நாட்டு மக்கள் மனங்களிலே நாணயத்தை வளர்க்கணும்"*

*விதையான நற்சிந்தனை வளர்வதற்கு நாணயம் என்ற உரம் அவசியம், மனிதநேய மாண்பு மிளிரும் சமூக அக்கறை இது.*

*பள்ளி என்பது நிலம், கல்வி என்பது விதை; பிள்ளைகளைச் சீர்திருத்தி நல்வழியில் செலுத்தி பெரியவர்கள் ஆக்கணும் என்பது தான் விளைச்சல் என்ற*

பலன். கன்னியருக்கும் காளையருக்கும் கட்டுப்பாடு என்ற விதை விதைத்து, அன்பு என்ற உரம் மூலம் கற்பு நிலை தவறாத காதல் பயிர் வளர்க்க வேண்டும். காதல் இருந்து மணமுடித்து, அன்னை தந்தையாக, தம் பொறுப்பை விதைக்க வேண்டும். மீண்டும் அடுத்த கட்டத்தில் தன் பொறுப்பு மற்றும் கடமையாகப் பின்வரும் சந்ததியினரைப் பேறும் புகழும் அடையுமாறு வளர்ச்சி அடையச் செய்தல் வேண்டும். இங்ஙனம், கதாநாயகியுடன் ஆன காதல் பாட்டில் விவசாயி என்ற கதாநாயகன் பாத்திரப் படைப்பின் வட்டத்துக்குள் நின்று கல்வி, குடும்பம் பற்றிய சிறப்பான பொது நலன் சார்ந்த கருத்துக்கள் இப்பாடலில் அமையப்பெற்றுள்ளது பெருமைக்குரியது.

செல்வம் இருப்பவர்கள் இதயத்திலே இரக்கம் என்ற விதை விதைத்து இல்லாதார் வாழ்க்கையிலே இன்பப் பயிர் வளர்க்கணும் என சோசலிச கருத்துக்களை நயம் படக் கூறுவதன் மூலம் கதாநாயகன் ஓர் ஏழைப்பங்காளன் என்ற அடைமொழிக்கு அத்தாட்சியாக இப்பாடல் வரிகள் அமைந்துள்ளன.

பார் முழுவதும் மனித குல பண்புகள் என்ற விதை இட்டு, பாமரர்கள் நெஞ்சில் பகுத்தறிவு விதைத்து (இந்த தருணத்தில், பண்பின் வெளிப்பாடாக ஒரு மேல் துண்டினை எடுத்து கதாநாயகி உடுத்தியிருந்த பாரம்பரியமற்ற வகை ஆடையின் மேல் போர்த்தும் காட்சி இடம் பெறும்) பெற்ற திருநாட்டினிலே பற்று என்ற விதை விதைத்து, அத்துடன், நல்ல ஒற்றுமையை வளர்க்கணும் என்ற கருத்து தனிமனித நாணயத்தில் தொடங்கி நாட்டுப்பற்றில் முடியும். இந்த அருமையான பாடல் தனிமனித ஒழுக்கம் மூலம் அந்த தேசமே முன்னேற்றம் பெறும் என்ற மகத்தான எதார்த்தமான தத்துவத்தைப் பறை சாற்றுகிறது.

இந்த நேரத்தில் ஒன்றைக் குறிப்பிட்டாக வேண்டும். எந்தப் பாடல் ஆசிரியர் எழுதினாலும், எந்தப் பாடகர் பாடினாலும், யார் இசை அமைத்தாலும் அந்தப் பாடல்கள் அனைத்தும் "வாத்தியார் பாடல்கள் " என்றே அறியப்பட்டு, அங்கீகரிக்கப்பட்டு , ஏற்றுக் கொள்ளப்பட்டு இன்றளவும் உயிரோட்டமாய் உலாவுகின்றன என்பதுதான் உண்மை.

**5. படகோட்டி:**

'பாட்டுக்கு ஒரு படகோட்டி' எனப் பேசப்படும் இந்த அழகிய வெற்றிக் காவியத்தில் ஓர் அழுத்தமான பாடல், ' தரை மேல் பிறக்க வைத்தான் ' என்று கவிஞர் வாலியின் வைர வரிகளில் அதிசயக் குரலோன் டிஎம்எஸ் அவர்களின் காந்தக் குரலில் உருவான பாடல்.

பாடலின் தொகையறா மட்டுமே பெரிய சமூகத் தாக்கத்தை ஏற்படுத்துவதாக,
"உலகத்தின் தூக்கம் கலையாதோ,
உள்ளத்தின் ஏக்கம் தொலையாதோ,
உழைப்பவர் வாழ்க்கை மலராதோ,
ஒரு நாள் பொழுதும் புலராதோ''

என்ற வரிகளைக் கொண்டது. துன்பத்திலிருந்து விடுதலை, உழைப்பவரின் வாழ்வியல் பற்றிய அக்கறை மற்றும் கவலை தொனிக்கும் வரிகளைப் பாடும் நாயகனின் உணர்வை, மனதை நெகிழச் செய்யும் முக பாவங்களுடன் தத்ரூபமாக வெளிப்படுத்தி இருப்பார் எம்ஜிஆர்.

படகோட்டியாகப் பரிணமிக்கும் எம்ஜிஆர் அவர்கள் உலகெங்கும் வாழும் ஒட்டு மொத்த மக்கள் அனைவருக்கும் ஒரு படகோட்டியின் வாழ்க்கையினை பட்டவர்த்தனமாக பளிச்சென படம் பிடித்துக் காட்டும் பாங்கு மெய் சிலிர்க்க வைக்கும். பாடல் முழுவதும், ஒவ்வொரு வரியும் சொல்லும் வியந்து பிரமிக்க வைக்கும் பிரம்மாண்டமான படைப்பு. இப்பாடல் பொருளின் மகத்துவத்தை எழுதினால் ஏட்டிலடங்காது. வார்த்தைகளால் வர்ணிக்கவோ அளவிடவோ முடியாத உயிரோட்டமான உணர்ச்சி மிக்க பாடல். ஆகையால் சிலவற்றை மட்டும்தான் இங்கு பகிர்ந்துகொள்ள முடியும்.

படகோட்டி பிறந்தது தரையில்; பிழைப்பு தண்ணீரில். கரை மேல் இருக்கும் அவன் வீட்டுப் பெண்கள் குளிப்பதோ கண்ணீரில். கண்ணீரில் குளிக்கும் அளவு சோகம், காரணம் குடும்பத் தலைவன் திரும்புவானா, எப்போது திரும்புவான், திரும்பிய கணவன் ஆரோக்கியம் எப்படி இருக்கும், அவன் ஈட்டிய வருமானம் குடும்பத்தை நகர்த்த, பிள்ளைகளைப் பராமரிக்க போதுமானதாக இல்லையே என்ற கவலை போன்ற காரணங்களால்.

மனைவி, குழந்தைகள் உட்பட உயிரான உறவுகளை தரையில் விட்டு விட்டு அலை கடல் மேல் பாதுகாப்பின்றி பிழைப்பு தேடும் உயிர் மீனவனுடையது. இது கடலில் பயணிக்கும் போது மீனவர் படும் மனநிலை. அவர்கள் தங்கள் வீடு என வாழ்வில் அதிக காலம் செலவிடும் இருப்பிடம் நிலவு ஒளியின் கீழ் கடலில் தான். அடுத்த அடி கேட்பவர்களுக்குக் கண்ணீர் வரவழைக்கும் வரி.
"முடிந்தால் முடியும்;
தொடர்ந்தால் தொடரும்
இது தான் எங்கள் வாழ்க்கை. "
கடல் முழுவதும் நீர்; ஆனால், குடிப்பதற்குத் தண்ணீர் தர ஆளில்லை என்ற விந்தையான சூழல். கடலில் ஏற்படும் எந்த வித கஷ்டத்திற்கும் யாரும்

*துணையில்லாமல், துணிந்து பயணிக்க வேண்டிய துர்பாக்கிய நிலை தான் வாழ்க்கை நடைமுறை என்ற எதார்த்தம் மீனவரின் வாழ்க்கை.*

*ஒரு நாள் போவார் ஒருநாள் வருவார், அது எந்த ஒரு நாள் என்று அவருக்கே தெரியாது. ஏதோ ஒரு நாள் கரை திரும்புவார். ஒவ்வொரு நாளும் அந்த மீனவர் உட்பட குடும்ப உறுப்பினர்களுக்குத் துன்பம், கவலை, வேதனை. எல்லோரும் எப்படியோ சிறியதோ பெரியதோ ஏற்றுக் கொள்ளக்கூடிய சிரமங்களுக்கு மத்தியில் பொருள் ஈட்ட வாய்ப்பு இருக்கும் போது, வயிற்றுப் பிழைப்புக்காக இத்துணை கஷ்டங்களை, சவால்களை எதிர்கொள்ளும் ஓர் பரிதாப வாழ்வியல் சிக்கலில் ஆட்பட்டுள்ள ஓர் படகோட்டி அல்லது மீனவர் வாழ்வில் ஏனைய மக்கள் அக்கறையும் ஆதங்கமும் செலுத்த வில்லையே என்று கதறும் கதாநாயகன் எம்ஜிஆர். இந்த எளிய பாவப்பட்ட ஜீவன்களின் வாழ்க்கை முன்னேற நினைக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்புடன் வேண்டுகோளை மக்கள் முன் சமர்ப்பிக்கிறார்.*




***6. படகோட்டி- 'கொடுத்ததெல்லாம் கொடுத்தான்' பாடல்:***

*வாலி அவர்களின் வீர முழக்கம் இடும் காலத்தால் அழியா கருத்தாழமிக்க பாடல்கள் எம்ஜிஆர் அவர்களுக்கென்று எழுதப்பட்ட தனித்துவம் மிக்கவை என்று வாலி அவர்களே ஒரு பேட்டியில் சொல்லி இருப்பார். அந்த வரிசையில், படகோட்டியின் 'கொடுத்ததெல்லாம் கொடுத்தான் - அவன் யாருக்காகக் கொடுத்தான்? ' என்பது அற்புதமான ஓர் பாடல்.*

*'பிறப்பொக்கும் எல்லா உயிருக்கும்' என்று இன்று பெரிய அளவில் பேசப்படும் கருத்துக்களை அன்றே ஆணித்தரமாகப் பறைசாற்றும் பாடல். கடவுள்*

*நம்பிக்கையில் உள்ள பெரும்பாலான மக்களுக்கு, அந்த நம்பிக்கையை ஒட்டியே நல்ல விஷயங்களை எடுத்துரைக்கும் முனைப்பு பாராட்டுதலுக்குரியது. இறைவன் படைத்தவையெல்லாம் பொதுவானவை; பாரபட்சம் அற்றவை என்பதை உறுதிப்பட உரைக்கும் ஓர் உரிமை கீதம்.*

*மண் குடிசை வாசல் என்றால் தென்றலுக்கு வெறுப்பா? இயற்கையின் கொடை தானே தென்றல். மாலையில் வரும் நிலாவும் இயற்கையின் கருவூலம்தானே தானே, அது ஏழை என்று வெளிச்சம் தர மறுக்குமோ?*

*எல்லாருக்கும் பொதுவான இறைவன் ஒருபோதும் யாரிடமும் மனிதனால் வகுக்கப்பட்ட பாகுபாடுகளைக் காட்டுவதில்லை என்று தெய்வ மகிமையைப் பேசும் அதே வரியின் மற்றொரு புறம் சமுதாயச் சீர்கேடும் ஒருசேரச் சாடப்படும். கவிஞர் வாலி அவர்கள் சொன்னது போல் 'எம்ஜிஆர் அவர்களுக்காகத் தான், அவருக்காக மட்டுமே' என்ற தனித்துவம் புலப்படும். ஏனெனில் ஆழமான, பரவலான நேர்மறை விளைவுகளை விரைவில் ஏராளமானவரிடம் ஏற்படுத்தக்கூடிய ஏவுகணை இந்த அபூர்வ சந்திரனுக்கு மட்டுமே உண்டு என்பதை கலையுலகம் நன்கு அறிந்திருந்தது.*

*உனக்காக இது; உனக்கு இது கிடையாது அது மட்டும் தான் என்பது போன்ற பாகுபாடு இறைவனுக்கு இருக்க முடியாது. படைத்தவன் மேல் பழியில்லை என்று எம்ஜிஆர் அவர்கள் வாயாலேயே சொல்ல வைத்து, பசித்தவன் மேல் பாவமில்லை என்று விதி – பாவத்திற்குத் தண்டனை போன்ற செயற்கை சித்தாந்தங்களைச் சாடியிருப்பார் வாலி. மேலும், சமூக பொருளாதார ரீதியில் வாய்ப்பும் பணமும் கிடைத்து உயர்நிலைக்குச் சென்றவர்கள் அதற்கு அச்சாணியாக விளங்கிய உழைக்கும் வர்க்கத்தினை ஓரங்கட்டி உதாசீனப்படுத்துகிறார்களே என்ற ஆதங்கமும், ஆத்திரமும் பிளிறும் குமுறல்களாக வரும் வேதனைக் குரல் தான் இப்பாடல். இறைவனைப் பிரார்த்திக்கும் நபர்களை மனதில் கொண்டு பாடிய வரி, 'பலர் வாட வாட, சிலர் வாழ வாழ ஒருபோதும் தெய்வம் கொடுப்பதில்லை' என்ற முழக்கம்.*

*வியப்பூட்டும் வார்த்தை விளையாட்டு; இல்லை என்போர் இங்கு உண்டு; ஆனால், பணம், பொருள் உள்ளவர்கள் இல்லை என்கின்றனர். அவர்களின் மடி நிறையப் பொருள்; ஆனால், மனம் நிறைய இருள். பொருள் கொண்ட பேர்கள் மனம் கொள்வதில்லை ; தரும் கைகள் தேடி பொருள் வந்ததில்லை என்ற இதே கருத்து மற்றொரு பாடலிலும் வலியுறுத்தப்பட்டது. 'எது வந்த போதும்*

*பொது என்று வைத்து*

வாழ்பவரை வாழ்த்திடுவோம் , என்ற இதே கருத்தையொட்டி மற்றுமொரு பாடலில், வேறொரு கோணத்தில்,

'மனம் என்ற கோவில்
திறக்கின்ற வேளை
அழைக்காமல் அங்கே
தெய்வம் வந்து சேரும் ' என்று ஒலிக்கும்.

இதைவிட சோசலிச கருத்துக்களைத் தெறிக்க விடும் பாடல்கள் உண்டா? இருக்கலாம்; ஒருவேளை, அவை வேறு எம்ஜிஆர் பாடல்களாக இருக்கும் என்பது தான் நிதர்சனம். இப்பாடலின் கருத்துக்கள் மீது ஈர்ப்புள்ள எம்ஜிஆர் என்ற சக்திமானின் வாகனத்தின் வாயிலாக பொது உடைமை, சோசலிசம், சமத்துவம், உழைக்கும் வர்க்கம், சமூக நீதி, இறைப் பற்று போன்ற பல திசைகளில் பயணித்ததால் அவை குறித்த இலக்கினை அடைந்திருக்கும் என்பதில் ஐயமில்லை.




*7.* ***தனிப்பிறவி:***

உழைப்பு பற்றிய பாடல்கள் என்றிருந்தால் அந்தப் பட்டியலில் கட்டாயம் இடம் பெற்றிருக்கும் தனித்துவமான பாடல் தனிப்பிறவி படத்தில் இடம்பெற்ற கவியரசர் கண்ணதாசன் அவர்களது துடிப்பான துள்ளல் பாடல் ' உழைக்கும் கைகளே '.

*உற்சாகமூட்டும் பின்னணி இசையுடன், மயக்க வைக்கும் மதுரை டிஎம்எஸ் அவர்களின் குரலில் மன்னாதி மன்னனின் ஆர்ப்பரிக்கும் உடல் மொழியுடன் வித்தியாசமான 'ஸ்டைலிலும் கெட் அப்பிலும் படத்தில் இடம் பெறும். உழைக்கும், உருவாக்கும் மற்றும் பழைய முறையை மாற்றி உலகைப் புது முறையில் உண்டாக்கும் கைகள் தான் உழைப்பாளியின் உண்மை மூலதனம்.*

*ஆற்று நீரைத் தேக்கி வைக்க அணைகள் கட்டும் தொழிலாளிகள், ஆண் பெண் ஆகிய இரு பாலர்களுக்கும் மானம் காக்கும் ஆடைகள் உருவாக்கும் நெசவாளிகள், சேற்றில் கை வைத்தால் தான் நாம் சோற்றில் கை வைக்க முடியும் என்ற கோட்பாட்டின் படி உழைக்கும் விவசாயிகள் மற்றும் உடல் வருத்தி, கைகள் சிவந்து உழைக்கும் இன்ன பிற தொழிலாளிகள் ஆகிய அத்தனை பேருக்கும் வீர வணக்கம் சொல்வது போல் அமையப்பெற்றுள்ளது கவிஞர் கண்ணதாசன் அவர்களின் எளிய இனிய நடையிலான இப்பாடல்.*

*பலன் மிகுந்த இயந்திரங்களைக் கண்டுபிடித்தவர்கள்; பாதைகள் அமைத்து உலகை ஒன்றாக இணைத்தவர்கள் மற்றும் பாரில் உள்ள பெருமைகள் அனைத்திற்கும் காரணமானவர்கள், எல்லாவற்றிற்கும் மேலாக இரத்தத்தை வியர்வையாக்கி உழைத்த உழைப்பாளிகள் யாவரும் போற்றுதலுக்குரிய சிறப்பானவர்கள் என்று மகிழ்ச்சியைப் பெருமிதத்தோடு பகிர்ந்து கொள்ளும் ஆனந்தப் பாடல் இது.*

*மாநில, தேச எல்லைகளைக் கடந்து உலகம் எங்கும் உள்ள தொழிலாளிகள், ‘உழைப்பாளிகள்’ என்று ஓர் குடையின் கீழ் ஒன்று பட்டு ஒருங்கிணைந்து செயல் படவேண்டும். அத்துடன், சந்தர்ப்பம் நேரின், நாட்டைப் பாதுகாக்கும் உயிரான கடமைக்கும் தயாராக போர்க்களம் புகுவோம் என்ற புரட்சி அறைகூவலும் உண்டு. மிக முக்கியமாக சமரசமற்ற குணாதிசயமாக தர்மம், நீதி, நேர்மை, மக்களாட்சி போன்ற நெறிமுறைகளிலிருந்து பிறழாமல் வாழ்ந்து காட்ட வேண்டும் என்ற போதனைகளையும் உள்ளடக்கியதாகவுள்ளது இப்பாடலின் தனிச்சிறப்பு.*

*இந்தப் பாடலின் காட்சி அமைப்பு ஒரு 'பட்டறையில்' இயங்கும் செயல்பாடுகளை நம் கண்முன் காட்டும் அதே வேளையில், இயல்பான சூழ்நிலையில் எழுச்சியுடன் பாடப்படும் இந்தப் பாடல் ஒட்டு மொத்த உலக உழைப்பாளிகளுக்கும் சமர்ப்பணமாக அமைந்துள்ளது என்றால் அது மிகையாகாது.*

## சந்திரோதயம் பதிப்பகம், மதுரை

3/422, Thiruvalluvar Street,
Dinamani Nagar, Madurai 625 018.
Mob: +91 7010997639

| நூல்கள் | | விலை (Rs.) |
|---|---|---|
| 1. | திருவிளையாடல் புராணக் கதைகள் (எளிய உரைநடையில்) | 200 |

**கவிஞர் முத்தமிழ் விரும்பியின் கவிதை நூல்கள்**

| | | |
|---|---|---|
| 1. | உன்னோடு உரையாடுதல் | 100 |
| 2. | காதல் மொழி | 200 |
| 3. | பார்வையில் பூத்த நிலா | 100 |
| 4. | தேனடையும் வரலாறு | 100 |
| 5. | நுண்கலை மருத்துவன் | 200 |
| 6. | தொடரும் புழுதிக்கால்கள் | 100 |

**முனைவர் செ. இராஜேஸ்வரியின்**

**எம்.ஜி.ஆர். பற்றிய நூல்கள்**

| | | |
|---|---|---|
| 1. | வெற்றித்திருமகன் எம்.ஜி.ஆர். | 200 |
| 2. | எம்.ஜி.ஆர். நிழல் நிஜம் நிரந்தரம் | 200 |
| 3. | சிக்கு மங்கு சிக்கு மங்கு சச்ச பப்பா (எம்.ஜி.ஆர். கற்பிக்கும் குழந்தை வளர்ப்பு முறைகள்) | 200 |
| 4. | வீரமகன் போராட வெற்றி மகள் பூச்சூட | 200 |
| 5. | மகளிர் போற்றும் மக்கள் தலைவர் எம்.ஜி.ஆர். | 200 |
| 6. | எம்.ஜி.ஆர். ஒரு ஜீவ நதி | 200 |
| 7. | எம்.ஜி.ஆர். ஒரு கலியுகப்போராளி | 200 |
| 8. | ஒளி விளக்கு எம்.ஜி.ஆர். | 200 |
| 9. | வெற்றிப் படிக்கட்டில் நாடோடி மன்னன் – I | 200 |
| 10. | நீங்க நல்லா இருக்கணும் [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் - I] | 200 |
| 11. | பாட்டுடைத் தலைவன் எம்.ஜி.ஆர். [எம்.ஜி.ஆரின் திரைப்படப் பாடல்கள் - II] | 200 |
| 12. | இரசிகர்களின் இதய தெய்வம் எம்.ஜி.ஆர். | 200 |
| 13. | முத்தமிழ்க் காவியம் மதுரை வீரன் | 200 |
| 14. | இரட்டை வேடத்தில் ஜொலிக்கும் எம்.ஜி.ஆர். | 200 |
| 15. | எம்.ஜி.ஆர். படங்களில் அறிவியல் புனைவு | 200 |
| 16. | படகோட்டி, மீனவ நண்பன் ஓர் ஒப்பீடு | 200 |
| 17. | Unique Fandom of MGR | 200 |
| 18. | எம்.ஜி.ஆர். படங்களில் தொழில் தர்மம் | 200 |
| 19. | எம்.ஜி.ஆர். படத்தில் சண்டைக்காட்சிகளின் சுவாரஸ்யங்கள்–I | 200 |
| 20. | எங்க வீட்டுப்பிள்ளை | 200 |

| | | |
|---|---|---|
| *21.* | *எம்.ஜி.ஆர். வீடும் விருந்தும்* | *200* |

**முனைவர் சந்திரிகா சுப்பிரமணியன் நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | *தலைமை பொறுப்பேற்கலாம்* | *120* |
| *2.* | *இணையத் தமிழ்* | *150* |
| *3.* | *ஊடகச் சட்டங்கள்* | *250* |
| *4.* | *ஆஸ்திரேலியாவில் அருந்தமிழ்* | *200* |
| *5.* | *கொசு வீட்டில் பாயாசம் (சிறுவர் நூல்)* | *200* |
| *6.* | *மாயோன் வீட்டுத் தோட்டத்தில் (சிறுவர் நூல்)* | *200* |

**முனைவர் செ. இராஜேஸ்வரியின்**
**சமூகப்பண்பாட்டு ஆய்வு நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | *பண்பாட்டு நகர்வுகள் – தமிழ் நாட்டில் இருந்து ஜப்பானுக்கு* | *200* |
| *2.* | *பெண் தெய்வ வழிபாடு* | *200* |
| *3.* | *தேவேந்திரன்* | *200* |
| *4.* | *மருதநிலப் பெண் தெய்வங்கள் (வராகி, பிடாரி, தவ்வை)* | *200* |
| *5.* | *இரு நிலத்தில் திருமுருகன்* | *200* |
| *6.* | *முன்னோர் வழிபாடு (கதிரவன், காலதேவன், நாகர் வழிபாடும்)* | *200* |
| *7.* | *வேளாண்மரபில் விதைப்பும் பூப்பும்* | *200* |
| *8.* | *யானைக்கடவுள்* | *200* |
| *9.* | *பெண் பூப்பின் புனித வழிபாடு* | *200* |

## முனைவர் செ. இராஜேஸ்வரியின்
**கவிதைத் திறனாய்வு நூல்கள்**

| | | |
|---|---|---|
| *1.* | *பாடுபொருளும் பாசப்பொருளும்* | *250* |
| *2.* | *"பூ மர நிழலி"ன் களமும் காலமும்* | *200* |
| *3.* | *"2020 தைமாதத்தில் இன்று" கவிதையில் அடிக்கருத்தியல் ஆய்வு* | *100* |
| *4.* | *கவிஞர் முத்தமிழ் விரும்பியின்* ***கவிதையில் காதல்*** | *100* |
| *5.* | *கவிஞர் முத்தமிழ் விரும்பியின் பயணக் கவிதைகள்* | *200* |

## ஆங்கிலக் கவிதைகளின் தமிழ் மொழி பெயர்ப்பு
**முனைவர் செ. இராஜேஸ்வரி**

| | | |
|---|---|---|
| *1.* | *எட்டுத்திக் கும் செல்வீர்* | *200* |
| *2.* | *அவன் கடவுளுக்கு நிகரானவன்* | *200* |
| *3.* | *செக்கச் சிவந்த ரோஜா* | *200* |
| *4.* | *கலீல் ஜிப்ரா னின் "மணலும் நுரையும்"* | *200* |
| *5.* | *கலீல் ஜிப்ரானின் "பாடல்கள் 14"* | *200* |

## Tamil Classics in English – (Dr. C. Rajeswari)

| | | |
|---|---|---|
| *1.* | Kurunthokai | 200 |
| *2.* | Agananooru | 200 |
| *3.* | Purananooru | 200 |
| *4.* | Naaladiyaar | 200 |
| *5.* | Aasaarakkovai | 200 |
| *6.* | A Predictress from the Hill (Thiru Kutrala Kuravanchi) | 200 |

7. A Peasant with two Wives (Mukkudal pallu) 200
8. Thiru Kutraala Kuravanji 200

**Socio Cultural Study Series**

1. Lord Indra – The Forgotten Diet 300
2. Serpent – The Primordial God 300

**தற்காலத் தமிழில் சங்க இலக்கிய நூல் வரிசை**

1. குறுந்தொகைக் கவிதைகள் 200

**மொழிபெயர்ப்பு ஆய்வு நூல்கள் – முனைவர் செ. இராஜேஸ்வரி**

1. மொழிபெயர்ப்பியல் ஆய்வு (ஆய்வு நூல்) 200
2. கவிதை மொழிபெயர்ப்பு 200
3. நவீன மொழிபெயர்ப்பு உத்திகள் (Co-author) 200
4. மொழிபெயர்ப்பில் பெயரும், பொருளும் 200

**தமிழ் இலக்கண நூல்**

1. தமிழில் வேற்றுமை உருபுகள் 200

**சிறு கதை, கவிதை**

1. அமராவதியின் காதல் - சத்யப்பிரபா 200
2. ரோஜா மொட்டு (சித்திரக் கவிதைகள்) - சத்யப்பிரபா 200

**மாத இதழ்கள்**

1. தமிழணங்கு மாத இதழ் 200
2. *Love Thamizh* 500

**பேராசிரியர் முனைவர் தே.ஞானசேகரனின் நூல்கள்**
**ஆங்கிலத்தில் – முனைவர் செ. இராஜேஸ்வரி**

**Moonstone Publication, Madurai**

1. Emerging Mallarism 200
2. Festival of lord Indra 200
3. Role of Devendirar's in Indian war of Independence (Sundaralingam Kudumbanar) 200
4. Re reading of Pallu literature 200
5. Mallariyan Literature 200
6. Frontyard without My Dad (Poem) 200

**Poems of Er.Poet Muththamizh Virumbi - In English Dr. C. Rajeswari**

**[Moonstone Publication]**

1. Therapist of the Finest Art 200
2. Following Dusty Feet 200

**Other Books**

1. Concepts of Constitution - Dr.S. Kalai Arasu 300
2. Aranyani By Vijeni (English Novel Part I & Part II) 200

# சந்திரோதயம் பதிப்பகத்தின் வெளியீடுகள்























**தொடர்புக்கு**

சந்திரோதயம் பதிப்பகம்
3/422, தினமணி நகர்,
மதுரை — 625 018
அலைபேசி : +91 7010997639

**Contact**

Chandrothayam Pathippagam
3/422, Dinamani Nagar
Madurai – 625 018
Ph: +91 7010997639



தமிழணங்கு மாத இதழை வெளியிடுவோர்:
இ. சதீஷ் ராஜ்குமார் (அட்வகேட்), இயக்குனர், சந்திரோதயம் அறக்கட்டளை, 3/422, தினமணி நகர், மதுரை 625 018, Ph: +91 7871123226

அன்பளிப்பு உரூபாய்: 120/-